GISTERED No. M. 1500.

# நவசக்தி

**NAVASAKTI**

(தமிழ் வாரப் பதிப்பு)

வெள்ளிக்கிழமை தோறும் வெளிவருவது.

சந்தா விவரம்.

| | ரூ. | அ. |
|---|---|---|
| ருட சந்தா ... | 5 | 0 |
| மாத சந்தா ... | 3 | 0 |
| வெளி நாடு-வருட சந்தா ... | 6 | 0 |

" வீடு பெறநில் "

" மாற்ருனுக் கிடங்கொடேல் "

" ஏற்பநிகழ்ச்சி "

விளம்பர விகிதம்.

| | | |
|---|---|---|
| கலம் 1-க்கு வாரம் 1-க்கு ரூ. ... | 7 | 0 |
| சில்லரை விளம்பரம் 1 அங். ... | 0 | 8 |

நீண்டகாலம் விளம்பரஞ் செய்வோர் நேரே எங்கட்கு எழுதவும்.

லம்பு 3. துந்துபிஞ கார்த்திகைமீ ௩௦௳ (15—12—22) பரல் 8

# சட்டசபை பகிஷ்காரம்

—(*)—

## " கௌமி ரிபோர்ட் "டின் கூற்று

—[*]—

### தமிழ் நாட்டு முஸ்லிம்களுக்கோர் எச்சரிக்கை.

—(*)—

### ஒத்துழையா தர்மத்தைக் கைவிடாதீர்கள்

—[*]—

நாமக்கல் ஸ்ரீமான் மஹம்டித் உஸ்மான் எழுதுகிறார்.

ஸ்லீம் சகோதரர்களே! நம்முடைய ஜதானியில் தமிழில் "சுதேசமித்" திரனும் பாஷையில் "கௌமிரிபோர்ட்" டும் பெ லரான ஜனங்களால் வாசிக்கப்படு றன. இவ்விரண்டுபத்திரிகைகளின் ஆசிரி ள் சட்டசபை பஹிஷ்காரத்திற்கு விரோ யிருக்கிருர்கள். இவ்விரண்டு பத்திரிகை ம் சட்டசபை செல்ல வேண்டுமென்கிற சங்களையேபிரசுரித்துவருகின்றன. தமிழ் டு முஸ்லீம்களில் ஒரு சிலரைத் தவிர யாவருக்கும் இங்கிலீஷ் தெரியாது. கயால் அவர்கள் " கௌமி ரிபோர்ட் " யாவது " சுதேசமித்திர " னையாவது வா வேண்டியிருக்கிறது. என்னுடைய லிம்சகோதரர்கள் அப்பேர்ப்பட்ட பத்திரி களை வாசித்து விட்டு ஏமாந்து போகாம க்கும்படியாக எச்சரிக்கை செய்கின் ன்.

சவ்வாய்க்கிழமை வெளிவான "ஸைபுல் லஹ்ம்" பத்திரிகையிலும், "நவசக்தியி" லும் ப் ஷாபி மஹம்மத் அவர்கள் " ஜமியதுல் மாவும் சட்டசபைகளும் " என்பதைப் விஸ்தாரமாய் எழுதியிருப்பதால் நான் தைப்பற்றி அதிகம் எழுதவேண்டியதில்லை.

கௌமி ரிபோர்ட்டின் கூற்று

ளலாஞ அப்துல்மஜீத் ஷராரை ஆசிரி க் கொண்ட " கௌமி ரிபோர்ட் " பர் மாதம் 15-க் தேதி எழுதிய தலையங் ன் மொழி பெயர்ப்பை " சுதேசமித்திர " பார்த்து விட்டு பதில் எழுதாமலிருக்க யவில்லை.

ட இந்தியாவில்பெயர்பெற்ற இந்துதலைவர் ம் சட்டசபை செல்வதை ஆட்சேபிக்க லையென்றும், சட்டசபை பஹிஷ்காரத் ஆதரிக்கின்றவர்களில்ஜனங்களுள்செல் க்கு வாய்ந்த இந்து தலைவர்கள்எவரையுங் ணுமென்றும் 'கௌமிரிபோர்ட்' எழுதியிருப் னது விநோதத்திலும் விநோதமாயிருக்கி சட்டசபைசெல்லக்கூடாதென்றஇந்தியா சிங்கங்களெல்லாம், எந்தக்கவர்மெண் ரால் இந்த சட்டசபைகள் ஏற்படுத்தப் னவோ அதே கவர்மெண்டாரால் சிறை அடைக்கப்பட் டிருக்கின்றனவென்பதை ஷரார் அவர்கள் மறந்து விட்டார்போல் ன்றுகிறது. அதுவுமன்றி தற்பொழுது ளியிலிருக்கும்படியான பெரிய இந்து தலை ளாகிய ஸ்ரீமான்கள் இராஜகோபாலாச் யார், அரங்கய்யர், சுவாமிசங்கராச்சாரி , விஜயராகவாச்சாரியார், கஸ்தூரிரங் ங்கார், அரித்தயாளநாக், ஸ்ரீமதிகள், கஸ் பாய், சரோஜினி தேவி முதலானவர் அவமானப் படுத்தியதாகும். இவர்க ல்லாம் இந்து தலைவர்களல்ல வென்ருல் தான் தலைவர்கள் என்று எனக்கு ங்கவில்லை. ஜனங்கள் சொற்படி நடக் வர்கள் தலைவர்களா, அல்லது தான் ன்னபடி ஜனங்களை ஆட்டுபவர்கள் வர்களா? தலைவர்கள் சொன்னபடி ல்லாம் ஜனங்கள் ஆடின காலம் மலை ப் போய் விட்டதென்பதை இன்னும் தலைவர்கள் தெரிந்து கொள்ளாமலிருப் ஆச்சரியமாய் இருக்கிறது. கல்கத்தாவில் ய விசேஷகாங்கிரசில் இந்தச்சட்டசபை ஷ்கார தீர்மானத்தை எல்லாத் தலைவர் களும் எதிர்த்துப் பயன்படாமல்போயிற்றென் பதை அறிந்த ஸ்ரீ ஷரார் அவர்கள் சட்டசபை பஹிஷ்காரத்தை இந்து தலைவர்களில் முக் கியமானவர்கள் ஆதரிக்கவில்லை யென்று எடுத்துக் காட்டுவது பிரயோஜன மற்றதாகும்.

கிலாபத் விசாரணைக்கமிஷன்பின்வருமாறு எழுதுவதாக அதே "கௌமி ரிபோர்ட்" எடுத் துக் காட்டுகின்றது. "தற்பொழுது சட்ட சபை விஷயத்தைப்பற்றி ஆலோசிக்க இது தக்ககாலமல்லவென்று, நாம் அபிப்பிராயப் படுகிறோம்". சகோதரர்களே! இதற்கு என்ன பொருள் என்பது நான் சொல்லாமலே விளங்கும். சட்ட சபைக்குச் செல்லவேண்டு மென்கிற பொருள் இதில் இருப்பதாகப் பைத் தியக்காரனும் சொல்லமாட்டான். இதற்கு உண்மையான பொருள் என்னவென்பதை ஒவ்வொரு முஸ்லீமும் கவனிக்கவேண்டும். அவ்விஷயத்தைப் பற்றிச்சொல்வதற்கு இது தக்க காலமல்லவென்பதிலுலேயே இதற்கு முன் செய்யப்பட்ட காங்கிரஸ் கிலாபத் தீர் மானங்களின்படி நடப்பதுதான் நம்முடைய கடமையென்று தெளிவாகத் தெரிகின்றது. அதுவுமன்றி நாம் தற்பொழுது செய்யவேண் டிய வேலைகள் அநேகமிருக்க, அவைகளை விட்டு விட்டு உபயோக மற்ற இவ்விஷயத் தைப்பற்றி விவாதித்துக் கொண்டிருப்பதில் பிரயோஜனமில்லையென்றுதான் பொருள்படு மே யொழிய வேறொன்றுமில்லை. ஆகையால் முஸ்லீம் சகோதரர்களே! ஸ்ரீ ஷரார் அவர்கள் தம்முடைய சொந்த அபிப்பிராயத் திற்குத் தக்கவிதமாக எப்படி ஒரு வக்கீல் தம் கட்சிக்காரரை ஆதரித்துப் பேசுவதில் தமக்கு வேண்டியவைகளை மாத்திரம் சொல்லித் தமக்கு வேண்டிய வகையில் பொருள் செய் வாரோ அதேமாதிரி தம் பத்திரிகையில் எழுதுவது விசனிக்கத்தக்கது.

மௌலாஞ ஷரார் அவர்கள், ஜமியதுல் உலமா சட்டசபைசேர்தலில் நிற்பது நியாய மென்று சொல்லியிருப்பதாக எழுதியிருக் கிருர். ஹகீம் அஜ்மல்கான் வீட்டில் கூடிய 5 பேர்கள் கொண்ட ஒரு சபை 700 மௌல்விகள் கையொப்பமிட்ட "பத்வாவை" நிராகரிக்க முடியாதென்பதை ஜனுப் ஷாபி மஹம்மத் அவர்கள் வெகு தெளிவாக எடுத் துக்காட்டியிருக்கின்ருர். அப்படி இந்த ஐந்து பேர் செய்த தீர்மானம் நியாயமாய் யிருக் தாலும், மனச்சாட்சியின்படிநடக்கிறவர்கள் இதன்படியே நடந்தாகவேண்டுமென்று நம் மைக் கட்டுப்படுத்தாது. சட்டசபைக்குச்செல் லவேண்டுமென்கிற ஹகீம்ஜீபோன்ற முஸ் லீம்களை மதப்படி கட்டுப்படுத்தக் கூடா தென்பதுதான் பொருளேயொழிய ஆஸாத் சுபானி போன்றவர்கள் சட்டசபைக்குச் செல்லாவிட்டால் அது மார்க்க விரோதமாகு மென்று பொருளாகமாட்டாது. அநியாய மென்றும் பொருள்படாது. சட்டசபைகள் நம்முடைய மார்க்கத்திற்காக வென்று திறந்து வைக்கப்பட்ட மஸ்ஜிதுகளுமல்ல; புண்ணிய ஸ்தலங்களுமல்ல. முஸ்லீம்களுடைய புண் ணியஸ்தலங்களை எப்படி சட்டசபைகளைத் திறந்துவைத்த இதே பிரிட்டிஷார்கள் அரே பியாவில் திறந்து வைத்திருக்கிருர்களென்ப தை சட்டசபைகளை ஆதரித்த 5உலமாக் களும் ஸ்ரீ ஷரார் அவர்களும் மறந்துவிட்டார் கள் போல் தோன்றுகிறது.

சென்னையில் கூறப்படும் அபிப்பிராயங் களைப் பற்றி எழுதுகையில், "கௌமி ரிபோர்ட்" திருப்பூரில் கூடிய கிலாபத் மகா நாடு சட்டசபை பஹிஷ்காரத்தை ஆதரித் தது விதிகளுக்கு மாருகவும் மத்திய கிலாபத் கமிட்டியின் அபிப்பிராயத்திற்கு விரோதமா கவுமிருப்பதாக எழுதியிருப்பது விளங் கவில்லை. ஒரு கான்பரன்ஸ் கூடினுல் அதன் ஏகோபித்த அபிப்பிராயத்தை ஒரு தீர்மான மூலமாய் தெரிவிப்பது எந்த விதி களுக்கு மாருகவும் கிலாபத் கமிட்டியின் அபிப்பிராயத்திற்கு விரோதமாகவுமிருப்பதாக ஸ்ரீ ஷரார் அவர்கள் தெரிவித்தால் நல்மாய் இருக்கும். மகாநாடுகள் கூடுவது ஜனங்கள் அபிப்பிராயத்தைத் தெரிவிப்பதற்கல்லாமல் ஒப்பாரி பாடுவதற்கல்ல வென்பதை மௌ லாஞ ஷரார் அவர்கள் அறிவாரா? சட்ட சபைக்குச் செல்ல வேண்டியதைப் பற்றி நாம் தற்பொழுது யோசிக்க வேண்டியதில்லை யென்று கிலாபத் கமிஷன் அபிப்பிராயப்பட் டால், திருப்பூர் மகாநாடு சட்டசபை செல் லக் கூடாதென்கிற ஆதி கிலாபத் காங்கிரஸ் தீர்மானங்களை உறுதி செய்வதால் அது எப் படி விரோதமென்று நமக்குத் தெரியவில்லை. கிலாபத் கமிஷன், தேசம் சட்ட மறுப்புக்குத் தயாராய் இருக்கிறதா வென் பதை கண்டறிய ஏற்படுத்தப்பட்டது. அதன் தீர்மானங்களின்படி தான் திருப்பூர் மகா நாடு தீர்மானங்களை நிறைவேற்றியிருக்க வேண்டுமென்று எந்த விதி சொல்லுகிற தென்று தெரியவில்லை. அப்படி ஏதாவது விதி ஏற்பட்டிருக்குமானுல், அதை உடனே எடுத்துவிடுவது தான் நலமென்பதை நான் சொல்லவேண்டியதில்லை. 5 பேர்கள் கூடிய உலமாசபை, சட்டசபை பஹிஷ்காரத் தீர் மானத்தை நிராகரித்து விட்டதால், திருப்பூர் மகாநாட்டில் செய்த தீர்மானம் உபயோக மற்றதாய்ப் போகின்றதென்பதை எப்படி ஸ்ரீ ஷரார் அவர்கள் ஆதரிக்கின்ருரென்பது எனக்கு மிகவும் ஆச்சரியமாய் இருக்கிறது. கயாவில் கூடப் போகும் அகில இந்திய கிலா பத் மகாநாட்டில் தோற்றுப் போனுலொழிய எப்படி திருப்பூர் மகாநாட்டில் ஏகோபித்து நிறைவேற்றப்பட்ட தீர்மானம் உபயோகமற்ற தாய்ப் போய்விடுமென்பதை எல்லா முஸ் லீம் சகோதரர்களும் கவனிக்குமாறு கேட் டுக் கொள்ளுகிறேன்.

மதராஸ் ஜமியதுல் அற்குரே துருக்கி சமாதான உடன்படிக்கை ஏற்படும் வரை சட்டசபைகளின் நடவடிக்கைகளைத்தடைப் படுத்தும் விஷயத்தைப் பற்றி விவாதிப்பதை, நிறுத்தி வைக்க வேண்டுமென்று தீர்மானித் திருப்பதாக "கௌமி ரிபோர்ட்" எடுத்துக் காட்டுகின்றது. துருக்கி உடன்படிக்கைக் கும் சட்டசபை செல்வதா இல்லையா என்ப தற்கும் என்ன சம்பந்தமென்று யாருக்கும் தெரியவில்லை. சட்டசபைகளை ஸ்வராஜ் ஜிய வழியில் நமக்கு முதல் படியாக அளித் திருப்பதாக கவர்மெண்டாரும், மிதவாதி களும், 'ஜஸ்டிஸ்' கட்சியாரும் பறை சாற்று கின்ருர்கள். நமக்கு உடனே வேண்டியது ஸ்வராஜ்ஜியமும் பஞ்சாப் கிலாபத் அநீதி களுக்குப் பரிகாரமுமாயிருக்கப்படிகளைத்தாண் டிக்கொண்டிருந்து இன்னும் 50,100 வருஷங் கள் காத்திருக்க முடியாதென்பதுதான் ஒத் துழையாக்காரர்கள் கட்சி. சங்கதி இப் படி இருக்க, சட்டசபை செல்வதா இல்லையா என்பது எப்படி துருக்கி உடன்பாட்டைப் பொறுத்திருக்கிறதென்பது விந்தையிலும் விந் தையாயிருக்கின்றது.

இந்த அற்குரே சபையின் மேற் சொன்ன தீர்மானத்தில் தேசத்திற்கு விரோதமான காற்று அடிக்கிறது. சில இந்துக்கள் சொல்வது போல் தங்கள் காரியம் ஆய்விட்டால் முஸ் லீம்கள் பிரிந்து விடுவார்களென்பதற்கு இத் தீர்மானம் ஆதாரமாக விளங்குகின்றது. துரு க்கி உடன் படிக்கை துருக்கிக்குச் சாதகமாய் முடிந்து விட்டால் நாம் சட்டசபைகளுக்குச் செல்வது என்பது இத்தீர்மானத்தின் பொரு ளா? அல்லது துருக்கியர்களுக்குச் சரியான நியாயம் கிடைக்கா விட்டால், நாம் சட்ட சபைகளுக்குப் போகக்கூடாதென்பது பொரு ளா? அல்லது நமக்குக் கிலாபத் விஷயம் தீர்ந்து விட்டால் கவர்மெண்டுடன் நாம் ஒத் துழைக்க வேண்டுமென்பது பொருளா? இப் பேர்ப்பட்ட விஷமத்தனமான தீர்மானத்தை ஜமியதுல் அற்குரே தெரிந்தோ தெரியாமலோ நிறைவேற்றிச் சில இந்து சகோதரர்கள் மன தில் சந்தேகத்தைக் கிளப்பி விட்டார்களென் பதில் ஐயமே இல்லை. நாம் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கையில் நமக்கு உதவி செய்த இந் துக்களைக் கைவிட்டு விடுவோமா? இந்து முஸ் லீம் ஒற்றுமையைக் குலைத்து விடுவோமா? தேச பக்தியைத் துறந்து விடுவோமா? ஜமியதுல் அற் குரே செய்த இப்பேர்பட்ட விஷமத்தனமான தீர்மானத்தை மௌலாஞ ஷரார் அவர்க ளும் ஆதாரமாக எடுத்துக்கொண்டு பேசுவது சந்தேகத்திற் கிடமாயிருக்கின்றது. முஸ்லீம் சகோதரர்களே! [illegible] துருக்கி விஷயம் சாதகமான முடிவுக்கு வாராம லிருக்கிறது. ஆகவே இவ் விஷமத்தனமான தீர்மானத்தை வாபீஸ்வாங்குவதுதான் ஜமிய துல் அற்குரே செய்யக்கூடிய [illegible] ரியமாகும்.

### ஒத்துழையாமை

ஒத்துழையாமையிலுள்ளாம்மிருந்த [illegible] ஜன மடைந்திருக்கிறோமென்பதை ஸ்ரீமான் கள் தாஸ், நேரு முதலானவர்களே ஒப்புக் கொள்ளுகிருர்கள். சட்டசபைக்குச் சென்ற வர்கள் என்ன செய்து விட்டார்களென்பது வெட்ட வெளிச்சமாகத் தெரிகிறது. [illegible] வருஷகாலமாய்ச் செய்து வந்தது போல் இனி யும் வெளியிலிருந்து செய்ய வேண்டிய காரி யங்களைச் செய்தால் நமக்கு நல்ல பலன் கிடைக்கும்.

சட்டசபைகளுக்குள் சென்று வேலை செய் திருந்தால் [illegible] வேலை செய்திருக்கமுடியுமென்று ஸ்ரீமான்கள் தாஸாவது நேருவாவது சொல்லத் துணிவார் களா? நாம் வெளியிலிருந்து செய்ய வேண் டிய வேலைகள் அநேகமிருக்க, சட்டசபை களுக்குச் செல்வதிலும் ஓட்டுகள் வாங்குவதி லும் நம்முடைய காலத்தை வீணுக்ச் செல வழிக்க வேண்டுமென்று தன்னை அறிந்தோ அறியாமலோ சொல்லும்படியான தலைவர் களைப் பார்த்து நாம் வருந்தப்பட வேண்டிய தாயிருக்கிறது.

எல்லாவற்றையும் விட நாம் அதிகமாய் வருத்தப்பட வேண்டிய விஷயம் ஒன்று இருக்கின்றது. தேசத்தின் உயிர் போன்ற தலைவர்களான தாஸ், நேரு, ஹகீம்ஜி முத லானவர்கள் சட்டசபைக்குச் செல்வது ஒத் துழையாமைக்கு விரோதமல்லவென்று சொ ல்லும்படியான அநீதியை விட பெரிய அநீதி ஒத்துழையாமைக்கும் மகாத்மா காந்திக்கும் இவர்கள் செய்திருக்க முடியாது. [illegible] சொல்லின் தாங்களாகக் கொன்று போட்ட ஒத்துழையாமையைப் புதைப்பதற்கு [illegible] களின் உத்தரவிற்காகப் பிரயத்தனம் செய் கிருர்கள். மகாத்மா பேராலும் ஒத்துழை யாமை பேராலும் சட்டசபைக்குச் செல்ல வேண்டுமென்று இத்தலைவர்கள் சொல்லாம லிருந்தால் அதுவே இவர்கள் தற்பொழுது மகாத்மாவுக்கும் ஒத்துழையாமைக்கும் செய்த பேருதவியாகும். சட்டசபை பஹிஷ் கார விஷயத்தில் தான் மகாத்மா ஒத்துழை யாமையை மும்முரமாக நடத்தி வைத்தார். கல்கத்தா விசேஷ காங்கிரசில் எப்பொழுதும் ஒற்றுமையே நாடும் மகாத்மா சட்டசபை பஹிஷ்கார விஷயத்தில் இந்தியாவின் எல் லா முக்கிய தலைவர்களும் தமக்கு விரோத மாயிருந்தும், பிளவேற்பட்டும், சட்டசபை பஹிஷ்காரம் ஒத்துழையாமையின் முக்கிய அம்சமென்றல்லவா அதை விட்டுக் கொடு க்க முடியாதென்று சொல்லி விட்டார். இப் பொழுது சட்டசபைகளுக்குப் போவது ஒத்து ழையாமைக்குவிரோதமல்லவென்றுஸ்ரீதாஸ் சொன்னதினுல் தானென்ன? ஸ்ரீ நேருசொன் னதினுல் தானென்ன? ஜனங்கள் [illegible] போகமாட்டார்கள். [illegible] ஸர் முதலானவர்கள் கயாவில் தெரிந்து கொ ள்ளுவார்கள். சட்டசபை போவதை ஒத்துழை யாமைக்கு விரோதமாக மாட்டாதென்றும் மகாத்மா தேசத்தலைவர்கள் யாவரையும் [illegible] க்கு விரோதமாகவைத்துக்கொண்டிருக்கமாட் டார். தமிழ் நாட்டிலிருந்து அச்சமயம் [illegible] முஸ்லீம்கள் கல்கத்தாவிற்குச்சென்று மகாத் மாபக்கம் ஓட்டுகொடுத்தார்கள். [illegible] அவரையும், அலிசகோதரர்களையும், [illegible] காங்கிரஸில் [illegible] அப்துல்கலாம் ஆஸாத், நிசார் [illegible] கிச்சுலு முதலானவர்களையும் [illegible]

ப்பிலிட்டுத் தற்பொழுது மகாத்மா ஒருவர் இல்லாததினல், சட்டசபைக்குச் செல்வது ஒத்துழையாமைக்கு விரோதமல்லவென்று சொல்ல முஸ்லீம் சகோதரர்களே! உங்களுக்கு மனத்துணியுமா?

சிலர், காங்கிரஸ்காரர்கள் ஸ்தல ஸ்தாபனங்களுக்குப் போகையில் சட்டசபைகளுக்கு ஏன் போகக்கூடாதென்று கேட்கிருர்கள். எல்லா இராஜதானிகளிலும் மேற்படி ஸ்தாபனங்களில் இராஜ விசுவாசப் பிரமாணம் செய்ய வேண்டுமென்று கிடையாது. காங்கிரஸ் சட்டசபை பஹிஷ்காரத்தை ஏற்றுக் கொண்ட சமயத்தில் ஸ்தலஸ்தாபனங்களில் பிரமாணம் என்பதே கிடையாது. ஒத்துழையாமையை ஆரம்பித்தபிறகுகவர்ன்மெண்டாரால் இது புதிதாகச்சில இராஜதானிகளில் மாத்திரம் உண்டாக்கப் பட்டிருக்கிறது. ஆகையால் அவைகளைப் பற்றி நாம் கவனிக்க வேண்டியதில்லை.

முஸ்லீம் சகோதரர்களே! நாமும் ஒரு தேசத்தைச் சேர்ந்தவர்களென்றும் இந்தியா நாம் பிறந்த தேசமென்றும், நமக்கு வெட்கம், மானம், தேசாபிமானம் உண்டென்றும் நாமும் மனிதரென்றும்உலகத்திற்கு நிரூபித்துக்காட்ட வேண்டுமானல், மகாத்மா காந்தி அலிசகோதரர்களை அனுப்பியசட்டசபையைநாடுவதா? அவ்வுத்தமர்களை எந்த கவர்ன்மெண்டார் சிறைக்கனுப்பிஞர்களோ அவர்களால் ஏற்படுத்தப்பட்ட போலிச் சட்டசபைகளுக்குப் போவதா? கராச்சியில் தண்டனை விதித்த போது இஸ்லாத்தின் கண்ணும் முஸ்லீம்களின் சிங்கமுமாகிய ஷவுகத்அலி சயராஜ்ஜிய கவர்ன்மெண்டில் ஒரு தீர்மானம் செய்து எங்களை விடுவித்தால் நாம் சந்தோஷமுடன் வருவோமென்று சொன்னரே யொழிய, சட்டசபைகளுக்குச் செல்லுங்களென்று சொல்லவில்லை யென்பதை என்னுடைய முஸ்லீம் சகோதரர்களுக்குஞாபகப்படுத்துகிறேன். தங்களையே ஸ்தம்பிக்கச் செய்யும்படியானசட்டசபைகளை அரசாங்கத்தார்நமக்குச்சோதித்துப்பதாக நம்முடைய தலைவர்கள் நினைப்பது பகல்கனவுதான். தன்னைத் தான் கெடுத்துக் கொள்ளயாரும் இடம் கொடான். ஆகையால் சகோதரர்களே! எல்லாரும் கயாசென்றசட்டசபைபஹிஷ்கார தீர்மானத்தைஆதரியுங்கள். ஒத்துழையாமை தர்மத்தைக்கைவிடாதீர்கள். வந்தேமாதரம்.

## தமிழ்க் குருகுல வித்தியாலயம்

பாரத்வாஜ ஆசிரமம்

மேற்படி ஆசிரமவாசி ஸ்ரீராமாநந்தன் தெரிவிக்கிருர்

இன்று (கார்த்திகை௴ 23௳) வித்தியாலயமான துஹருக்கு(கல்லிடைக்குறிச்சிக்கு) தென்புறத்திலுள்ள ஓர் அழகியதோப்பில் திறந்துவைக்கப்பட்டது. நேற்றேதோப்பிலுள்ள கட்டடத்தில் புண்ணியா விவாசனம் வேதமுறைப்படி நடந்தது. இன்று காலை 4-மணிக்கு ஸ்ரீமான் - வ. வெ. ஸுப்ரஹ்மண்ய ஐயரும், ஸ்ரீ மகாதேவய்யரும், சிஷ்யர்களும் குருகுல மாணக்கர்களும் இதுவரையில் இருந்துவந்த கிருகத்திலிருந்து பஜனை செய்துகொண்டு தோப்புக்குச் சென்றார்கள். தேசியப் பள்ளிக்கூட உபாத்தியாயர் ஸ்ரீமான் கிருஷ்ணய்யர் பனியைலட்சியம் செய்யாமல் ஆசிரமத்தின்கிருகப்பிரவேசக் காலத்திலேயே வந்து உதவினர். புதிய இடத்தில் எல்லோரும் பஜனை செய்துவிட்டுத் தாம்பரபரணியின் நிர்மலமான தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்துவிட்டுத் திரும்பிவந்து காலை 8-மணிக்கு எல்லோரும் பஜனை செய்துகொண்டு உஞ்சவிருத்தி செய்தார்கள். ஜனங்கள் மிக உற்சாகத்தோடு அரிசி பிட்சை இட்டார்கள். சாயங்காலம் 5-மணிக்கு லட்சுமீவராக ஸ்வாமி ஸன்னிதானத்தில் ஸ்ரீமான் வ. வெ. ஸு. ஐயர் குருகுலத்தைப் பற்றி 1½ மணி நேரம் ஓர் பிரசங்கம் செய்தார். அதில் பாரத ஜாதியின் மூலாதாரமான லக்ஷியம் ஆத்யாத்மிக ஞானம் என்றும், ஆனல் அவர்கள் பௌதிக சாஸ்திர ஆராய்ச்சியிலும் செல்வ அபிவிருத்தியிலும் லக்ஷியம் வைக்காமலிருந்தார்கள் என்று சொல்லுவது தவறு என்றும், தற்காலத்தில் பாரமார்த்திக தர்மமாகட்டும், லௌகிக தர்மமாகட்டும் இரண்டும் நாட்டில் அருகிப்போய்விட்டது என்றும் இதற்குக்காரணம் தற்காலத்தில் ஆங்கிலப் பள்ளிக்கூடங்கள் நடைபெறும் முறைதான் என்றும் குருகுலங்கள் வைத்து, ஒழுக்கமும் கல்வியும் நிறைந்த ஆசாரியர்கள் மாணவர்களுடனேயே இருந்து அவர்களுக்குக் கல்வி புகட்டிவந்தால் மாணவர் இரண்டு வழிகளிலும் விருத்தியடைவார்களென்றும், அப்பொழுது தான் பாரததேசம் சீர்பெறும் என்றும் முற்காலத்தில் ராம் தாஸ் முதலிய மகான்கள் இம்மாதிரி சிஷ்யவர்க்கங்களைக்கொண்டே ஜாதியை உன்னதமான நிலைக்குக்கொண்டு வந்தார்களென்றும் சொல்லி, இப்பொழுது ஆரம்பிக்கப்படும் வித்தியாலயமானது இவ்வூரார் உள்படத் தமிழ் நாட்டார் அனைவரினுடைய அபிமானத்தையும், உதவியையும் பிரதி

கழித்தே ஸ்தாபிக்கப்படுகிறது என்றும் இதற்காக இவ்வூரார் ஆற்றங்கரையோரத்தில் விஸ்தாரமான புன்செய் நிலங்கள் சேர்த்துத்தரவேண்டும். இதில் கல்விகற்கும் மாணவர் ஜெர்மானியர், அமெரிக்கர், ஆங்கிலேயர்போல ரஸாயனம், யந்திரக்கலை, கிருஷி முதலிய பல்லாற்றானும் நாட்டின் செல்வத்தை அபிவிருத்தி செய்தும், தர்மத்தைப் பரிபாலித்தும் வருவார்கள் என்று கூறிமுடித்தார். ஸ்ரீமான் மகாதேவையர் இதையெல்லாம் ஆதரித்துப்பேசி வந்தனம் கூறியதோடு கூட்டம் கலைந்தது. பாடவகுப்புக்கள் தைமீ முதலே முறையாகத் துவக்கப்படும். அப்போது தமிழ் நாட்டுத் தலைவர்கள் பலர் வருவார்கள் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

## ஒத்துழையாமையின் தத்துவம்

கயாகாங்கரசும் நமது கடமையும்

மயிலாப்பூர் ஸ்ரீமான் ம. இரத்னசபாபதி முதலியார் எழுதுவது

ஒத்துழையாமை யென்கிற அரிய தத்துவத்தை உலகம் உய்யும் பொருட்டு உபதேசித்த மகாத்மா காந்தியைப் பற்றி நினைப்பதும், சொல்வதும், எழுதுவதும், அவர் போன்ற ஒருவரால் இயலுமேயன்றி, என் போன்ற சாமான்யர்களால் இயலா தென்பது அனைவரும் அறிந்த விஷயம். நமது சாஸ்திரங்களின் உண்மையையும், பண்டைப் பெருமையையும், நாகரிகத்தையும், உள்ளபடி உணர்ந்து, மனம் கசிந்து, கண்ணீர் வடித்து, மெய்பரவசமாகி, அஹிம்சா தர்மத்தையும், சாத்வீக நடையையும், அன்பையும், ஜீவகாருண்யத்தையும் ஆபுதங்களாகப் பூண்டு, நம்முடைய அச்சமும் அடிமைத்தனமும், அடியோடு அழிந்து நாம் ஆண் சிங்கங்களைப்போல் வாழவேண்டுமென்று நமக்கெனவாழும் அவ்வீரரை உடல், பொருள், ஆவி மூன்றையும் அர்ப்பணம் செய்து தேசத்தின் பொருட்டுத் தீர்காலம் தவஞ்செய்யும் தயாளுவை அறியாதாரில்லை.

> "தவஞ்செய்வார் தங்கருமஞ்
> செய்வார் மற்றல்லார்
> அவஞ்செய்வா ராசை
> யுட்பட்டு."

செல்வம், புகழ், கீர்த்தி, இவைகளை நாடாத தேசத் தொண்டொன்றையே பெரிதென எண்ணி இந்தியர்களுக்குச் சுதந்திரத்தை உண்டாக்கி, சுயராஜ்யமடைய வேண்டுமென்று சுய நலமின்றி உழைத்த உத்தமர் இவர். மகாத்மாவின் மகத்தானகுணங்களையும்,ஒத்துழையாமை யென்னும் சாத்வீக இயக்கத்தின் பெருமையையும் உலகம் கூடிய சீக்கிரத்தில் அறியும். நம்பொருட்டும், நம்தேசத்தின் பொருட்டும் உடலைத்தாங்கி மானம், ஆண்மை, தைரியம், தன்னம்பிக்கை, தேசாபிமானம், சுதந்திரதாகம், சுயராஜ்ய சித்தி இவைகளைப்போதித்த நமது தந்தையும், தாயும், உயிர்த்துணையுமாகிய குருநாதனை கயாகாங்கரஸ் என்னும் புண்ணிய தீர்த்தத்தில் மறந்து கைவிடலாமா?

> "மகன் தந்தைக்காற்று
> முதவிவன் தந்தை
> என்னேற்ருன் கொல்
> லெனுஞ் சொல்."

நம்முடைய மானம், கற்பு, சுயமரியாதை, என்றும் நிலைக்கவும், மிருக உணர்ச்சியும், மிருகபலமும் ஒழிந்து உலகில், அஹிம்சையும், அன்பும், நீதியும், சத்தியமும், தழைத்தோங்க ஒத்துழையாமை யென்னும் ஒப்பற்ற ஒளியை ஓங்கச்செய்த மூர்த்தியை நெருக்கடியான நேரத்தில் மறப்பது கொடிய பெரும்பாவம். தீர்த்தமென்பது பரிசுத்தமான பொருள்களும் பரிசுத்தவான்களும் நிறைந்துள்ள இடமாதலால், தீர்த்தத்தில் செய்தபாவங்களுக்குப் பரிகாரம் இல்லையென்பதை அன்பர்கள் அறிந்து, கயாகாங்கரசுக்குப் போகும் ஒவ்வொரு இந்தியரும், மகாத்மாவின் உபதேசத்தை அனுஷ்டானத்தில் காட்டுவதே அப்பெரியாருக்கு நாம் செய்யும் கைம்மாறு.

> "திரிவித உலகத் தரிதொரு ஞானி"

என்றபடி மறந்தும் அபகாரம் செய்யாத ஆப்தர், எதை அடைந்தால் நம்முடைய துக்கம் நீங்கி அளவிலா இன்பத்தை அடையலாமென்று உண்மையில் உழைத்தாரோ அவைகளை அறிந்து, புகழ், கீர்த்தி, இவைகளில் மனதைச்செல்ல வொட்டாமல் லோகோபகாரம் ஒன்றையே எண்ணி நடப்பது தான் செய்ந்நன்றியாகும்.

> "வானேயும் பெறில் வேண்டேன்
> மண்ணுள்வான் மதித்து மிரேன்"

என்று மாணிக்க வாசகர் சொன்னதும், புத்தர்-ராஜ போகத்தை விட்டதும், "காதற்ற ஊசியும் வாராதுகாணுங் கடைவழிக்கே," என்று, பட்டினத்துப்பிள்ளை தமிழ் ஞானியெனத் திரிந்ததும் தியாகத்தின் தீவிரத்தைக்காட்டுகின்றன. தியாகமின்றி எக்காலத்திலும், என்றும் எவரும் எதையும்எய்த முடியாதென்பதை நம்முடைய வேதம், ஆகமம், புராணம், இதிகாசம் இவைகளால் நன்கு உணரலாம்.

சட்டசபைப் பிரவேசம் வேண்டுமென்கிற சிலர், கல்வி அறிவிலும், யுக்திவாதத்திலும், தேசாபிமானத்திலும், தியாகத்திலும் சிறந்தவர்களென்பதை எவராலும் எதிர்க்கமுடியாது. காலகதியால் நல்லோர் மனமும் வேறுபாட்டை அடையக்கூடும். காங்கரஸ்மகாசபை ஒதுக்கித்தள்ளியசட்டசபைமீதுமோகம்கொள்ளுமாளுல்,அதுநமக்கு அவமானத்தையும், அபகீர்த்தியையும் உண்டாக்கும். சட்டசபைபுக விருப்பமுடைய நமது தலைவர்களைத் தலையாற வணங்கியும்,போற்றியும்,பூசித்தும், கெஞ்சியும், கேட்டும், மகாத்மா சிறைவாசம் செய்யு மளவும் சட்டசபை ஒருவருக்கும் கிட்டலாகாதென்று தீர்மானிக்கவேண்டும். கன்னியாகுமரியிலிருந்து இமயமலை வரையில் ஒருவிதசாத்வீக உணர்ச்சி உண்டாயிருப்பதும், ஏழைகளின் உள்ளத்தில் காந்தியின் பெயர் ஊடுருவிப் பாய்ந்திருப்பதும், மதுபானம் செய்வது மானக்கேடான காரியமென்று ஜனங்கள் கருதி வருவதும், தீண்டாமை ஒழியவேண்டுமென்று பலர் பாடுவதும், கதர் ஆடை அணிவது நாளுக்குநாள் பரவி வருவதும் தேசத்தின் முன்னேற்றத்திற்கு அறிகுறிகளாகும். இவ்வளவுக்கும் காரணம் சட்டசபைப் பகிஷ்காரமா? பிரவேசமா வென்பதை விவேகிகள் கவனிக்க வேண்டும்.

சட்டசபைப் பிரவேசமென்ற போதே நம்முடைய தீவிர எண்ணங்களும், ஊக்கமும், விடாமுயற்சியும் ஒழிந்து, நாம் என்றும் அடிமைகளாகவே ஆளப்பட்டு வரவேண்டு மென்னும் மரணமணி அடித்தாய்விட்டதென்று வாய்கூசாமல் சொல்லலாம்.

> "செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
> செயற் கரிய செய்க லாதார்."

என்ற பெரியோர் வாக்கியத்தை உணர்ந்து நமது நாட்டுக்கும், சுதந்திரத்திற்கும், சுயராஜ்யத்திற்கும் ஆபத்தை விளைவிக்காமல், நமக்கு ஆப்தராய், ஒத்துழையாமை யென்னும் மகாமந்திரத்தை உபதேசித்த மகாத்மாவின் ஆணையைச் சிரமேற்கொண்டு, கோபம், ஆவேசம், முதலிய அற்பகுணங்களைக் கைவிட்டு, காந்தியின் ஆத்மசக்தியைப் பெற்று, சித்த சுத்தியுடன் சட்டசபை பகிஷ்கார தீர்மானத்தை எல்லோரும் ஒன்றுபட்டு ஏகமனதாய் நிறைவேற்றுவார்களென்று நம்புகிறேன். இதுவே புண்ணிய பூமியாகிய கயாகாங்கரஸில் ஒவ்வொருவரும் செய்து தீரவேண்டிய முக்கியகடமை.

> "எந்நன்றி கொன்றார்க்கு
> முய்வுண்டா முய்வில்லை
> செய்த நன்றி கொன்ற மகற்கு."

கொடியபாவங்கள் எல்லாவற்றி[லும்] பெரும்பாவம் நன்றிமறப்பதே எ[ன்று] எண்ணி, பாவத்தையும், அபகாரத்தை[யும்] செய்யாமலும், செய்விக்காமலும், ஒ[வ்]வொரும் தங்கள் கடமையைச் செய்[ய] பிரார்த்திக்கிறேன்.

## சி. எம். 'மூக்குத்தூள்'

"சேப்போல் கன்சால்" என வழ[ங்கும்] உயர்ந்த புகயிலையைக்கொண்டு ந[ல்ல] வெண்ணெய் காய்ச்சின நெய் சேர்[த்து] கைதேர்ந்த வேலைக்காரர்களைக் கொ[ண்டு] தயார்செய்து வருகிறோம். இந்த சி. [எம்.] மூக்குத்தூளை ஒரு முறை வாங்கி [உப]யோகித்து எங்கள் வியாபாரத்தை அபிவி[ருத்]திக்குக் கொண்டுவர வேண்டுகிறோ[ம்.] எங்கள் விலாச விலை விபரம்:

| | | |
|---|---|---|
| வீசை 1-க்கு | ரூ. 4 | கால் வீசை [...] |
| அரை வீசை | ,, 2 | 5-பலத்துக்கு [...] |

வி. பி. சார்ஜ் பிரத்தியேகம்

சி. எம். சிங். பொடி டிப்பே[ா,]
ஆயிரம் விளக்கு மவுன்ரோட்,
செதிட்ரல் P.O. மதராஸ்.

## புது வருஷ[க்] காலண்டர்

2 கலரில் அச்சிடப்பெற்றது; தமி[ழ்] தேதியுடன் கூடியது; பெரிய ஸைஸ்; [12] மாதங்களுக்கும் 12 வித கண்ணைக் [கவ]ரும் ஆப்டோன் படங்கள் கொண்ட[து;] விலையுயர்ந்த காகிதம். ஒரு காலண்ட[ர்] விலை அணு 4. அதிகக் காலண்டர்[கள்] வாங்குவோர்க்கும், வியாபாரிகளுக்[கும்] தாராளமாய்க் கமிஷன் கொடுக்கப்ப[டும்.]

விலாசம்:—

அல்லயன்ஸ் கம்பெனி,
மயிலாப்பூர், சென்[னை.]

## நாவல்கள்

| | |
|---|---|
| பத்மாவதி சரித்திரம் ... | 2 |
| மேனகா (2-பாகமும்) ... | 3 |
| சுதா மோகன ரஞ்சிதம் 3-வால்யம் கொண்ட செட் 1-க்கு. | 2 |
| திக்கற்ற இருகுழந்தைகள் ... | 1 |
| சுதா ரத்னம் ... ... | 0 1 |
| இரத்தின மாளிகை ... | 0 1 |
| இரஞ்சிதமாலா ... ... | 0 |
| பாமாலை ... ... | 0 |
| தலையணை மந்திரோபதேசம் ... | 1 |
| வர்த்தக யுக்தி ... ... | 0 |
| வியாபார தந்திரம் ... ... | 1 |
| வித்தியானந்தர் ... ... | 1 |

அர்கா ப்ரசுர சாலை,
331, தங்கசாலை வீதி, G. T. மதரா[ஸ்.]

## இராஜீய நூல்கள்

| | ரூ. அ. | | ரூ. அ. | | ரூ. அ. |
|---|---|---|---|---|---|
| மகாத்மா காந்தி | 1 8 | ஒத்துழையாமை ஏன்? | 0 8 | மதிலால் நேரு | 0 2 |
| ஸி. ஆர் தாஸ் | 0 12 | மகாத்மா ஆன்மசக்தி | 0 10 | இந்திய சுயராஜ்யம் | 1 0 |
| லாலா லஜபதிராய் | 0 8 | இந்தியாவும் சுய ஆட்சி | 1 8 | முஸ்லீம் கிலாபத் | 0 4 |
| குரு டால்ஸ்டாய் | 0 4 | மகமத்அலி ஷவுகத்அலி | 1 0 | ஸ்வராஜ்யம் | 0 8 |

பாரத ஜனசபை (காங்கிரஸ் மகாசபையின் சரித்திரம்) 2 பாகங்கள் 2 0

10-ரூபாய்க்குமேல் புஸ்தகம் ஆர்டர் செய்கிறவர்களுக்கு ரூபாய்க்கு 1 அண[ா] கமிஷன் கொடுக்கப்படும்.

கலைவாணி புஸ்தகசாலை,
40, ஆயலூர் முத்தையா முதலி தெரு, G. T. சென்னை.

குறிப்பு:—டிசம்பர்௴ 8௳ வெளியான "நவசக்தி" 6-வது பக்கத்திலிருக்கிற விளம்பரத்தில் 'ஸரஸ்வதி விலாஸ புஸ்தகசாலை' என்றிருப்பதை "கலைவாணி புஸ்தகசாலை" என்று மாற்றிக்கொள்ளவும்.

## இனம்! விலையுமில்லை—செலவுமில்லை இனம்!!

புதுமை

ஆச்சரியத்திலும் ஆச்சரியம் ஆயுர்வேத சாஸ்திரம் முழுமையும் ஒருங்கே திரட்டி வித்வான்களும் அதிகப் படிப்பில்லாதவர்களும் ஸ்திரீகளும்கூட எளிதில் அறியக்கூடியவண்ணம்

### வைத்திய வித்தியா

என்னும் புத்தக ரூபமாய் இந்தியாவின் எல்லாப் பாஷைகளிலும் பிரசுரித்து லக்ஷக்கணக்கான புத்தகங்கள் இதுவரையில் கேட்போருக்கு இனமாயும் தபாற் செலவுகூட இல்லாமல் அனுப்பியிருக்கிறோம். நீங்களும் உங்களுடைய விலாசத்தைத் தெரிவித்தால் உங்களுக்கும் ஒரு பிரதி கிடைக்கும்.

ராஜவைத்திய நாராயணஜி கேசவஜீ, 27, சீனபஜார், மதரா[ஸ்.]

## [ப]ிரிட்டிஷ் சாமான்[க]ளின் பஹிஷ்காரமும் 'சுதேசமித்ர'னும்

[ஸ்ரீ]மான் பொ. திருகூடசுந்தரம் அவர்[கள்] எழுதுவது:—

[...]12-22ல் பிரசுரமான "சுதேசமித்ர" [...] மேற்கண்ட விஷயமாய் எழுதப்பட்[டிரு]க்கும் தலையங்கத்தில் ஒத்துழையாக் [கொ]ள்கையின் கர்த்தாவாகிய மஹாத்மா [காந்]தியடிகளின் நோக்கமும், அந்நிய வஸ்[திர]ங்களைக் கொளுத்தும் படிச்சொல்லிய [...] காரணமும் திரித்துக் கூறப்பட்டிருக்[கின்]றன. பொறுப்பு வாய்ந்த ஒரு பத்தி[ரி]கை தன் கொள்கையைச் "சாதிப்பதற்[கா]க" தன் "நினவு"களையே பிறர் [கொ]ள்கையெனக் கொண்டு பிறர் அபிப்பி[ராய]ங்களைத் திரித்துக் கூறி, வாசிப்போர் [ம]னதைக்கலைப்பது அழகாக மாட்டாது. [ஒத்]துழையாமை, அன்னிய வஸ்திர பகி[ஷ்கா]ரம் இவ்விரண்டு விஷயங்கள் சம்பந்[தமா]ய் மஹாத்மாஜியின் கொள்கையை [...]திரனை வாசிப்போர் அறியுமாறு அவர் [...]ல இந்தியா'' பத்திரிகையினின்று [எ]டுத்து எழுதுகிறேன்.

[(1]) மேற்கண்ட தலையங்கத்தில் "அன்[னிய] வஸ்து பகிஷ்காரத்தையும் சேர்த்[துக்] கொள்ள வேண்டும் என்று சேலம் [ஸ்ரீமா]ன் விஜய ராகவாச்சாரியார் கல்கத்[தா] விசேஷக் காங்கிரசில் பிரேரணை செய்[த]ற்கு மஹாத்மா முதலில் ஆக்ஷேபித்[துப்] பிறகு இணங்கி விட்டார்" என்று [மித்ர]ன் எழுதுகிறான். இதன் சம்பந்த[மாய்] காங்கிரஸ் முடிந்தவுடன் 15-9-20-ல் [யங்] இந்தியாவில் மஹாத்மா எழுதி[யதை] நேயர்கள் கவனிக்கவேண்டும். "நான் [காங்]கிரசில் கொண்டுவந்த தீர்மானத்தில் [அன்]னிய வஸ்து பஹிஷ்காரமும் காணப்[படு]கிறது. அதற்காக நான் வருந்துகி[றே]ன். அது எப்படி அங்கு வந்த தென்[பதை] நான் சொல்ல வேண்டியதில்லை. [ஆனா]ல் அது என் மனச்சாட்சிக்கு முரண்[படா]ததாலும் நான் ஒத்துப்போகக் கூடி[யவ]ன் என்பதைக் குறிக்கவும் எனக்குப் [பிரிய]மில்லாத ஓர் அம்சம் சேர்ந்த தீர்[மா]னத்தைப் பிரேரணை செய்ய ஒப்புக்[கொ]ண்டேன். அன்னிய வஸ்திர பஹி[ஷ்கா]ரம் சுதேசியத்திலேயே அடங்கும். [...] எல்லா அன்னிய வஸ்துக்களையும் [பஹி]ஷ்கரித்தலைக் கொண்டு முடிக்கக் [கூடா]த காரணத்தாலேயே, முட்டான் [...]மான காரியம் என்று சொல்லலாம். [ஆனா]ல் அது நம்மை நம்முடைய ஆடம்பர[ங்க]ளையும் வீணான வஸ்துக்களையும் விலக்[கும்]படி தூண்டுமாயின் நல்ல பலன் விளை[வ]தாகும். நமக்கு வேண்டியதாயில்லாத [...]ல அன்னிய வஸ்துவையும், நாமே நம் [நா]ட்டில் உற்பத்தி செய்து கொள்ளக்கூடு[வதா]னல் வேண்டியதாய் உள்ள சகல அன்[னி]ய வஸ்துவையும் விலக்க வேண்டுவது [நம்] உரிமையும் கடமையும் ஆகும்."

(2) சுதேசமித்திரன் எழுதுகிறான், [இ]ந்தமுறையை மஹாத்மா ஒப்புக்கொண்[ட]துடன் நில்லாமல் பிரிட்டிஷ் வஸ்திரங்[களை] ஆங்காங்கு சேர்த்து தகனம் செய்[த]து நமதுநேயர்களுக்கு ஞாபகமிருக்கும். [மஹ]ாத்மாவின் கொள்கைகளையும் செய்[கை]களையும் உள்ளபடி அறிந்த நேயர்க[ளு]க்கு மஹாத்மா இந்த முறையை ஒப்புக்[கொ]ள்ளாததும், பிரிட்டிஷ் வஸ்திரங்களை [மட்டு]மல்லாமல் சகல அன்னிய வஸ்திரங்களை [...] கொளுத்தியதும் தான் ஞாபகமிருக்[கும்].

(3) அம்முறை ஓர் இராஜ்யக்கருவி[யாக]பதை மாத்திரமே அவர் மதித்தார் [எ]ன்றும் மித்திரன் எழுதுகிறான். மித்ரன் [கூ]றுவது போல் அன்னிய வஸ்திர பகிஷ்[கா]ரத்தை ஓர் இராஜீயக்கருவியாக மாத்[திர]ம் மஹாத்மா கருதவில்லை என்பதும் [பிரி]ட்டிஷாருக்குக் கஷ்ட நஷ்டங்களை [...]பண்ணுவதற்காக அவர் அதை [ந]டிக்கவில்லை என்பதும் மஹாத்[மா]வின் கீழ்க் கண்ட வாக்கியங்களால் [நே]யர்கள் தெரிந்து கொள்ளலாம்.

"அன்னிய வஸ்திரங்களைக் கொளுத்து[வதி]ல் அன்னிய ஆடம்பரங்களின்பேரி[லு]ள்ள நம்முடைய மோகத்தையே நாம் [கொ]ளுத்துகிறோம். இங்கிலாந்துக்குப் பதி[லா]க ஜப்பான் நம்மைக்கெடுத்திருந்தாலும் [இந்]தியாவிற்கேற்பட்ட கேடு ஒன்றாகத்[தா]னிருக்கும். கொளுத்துவதன் நோக்கம் [நம்]மை தண்டித்துக் கொள்வதே; அன்[னிய] நாட்டாரைத் தண்டிப்பதல்ல. நாம் [பிரி]ட்டிஷ் வஸ்திரத்தைமட்டுமல்லாமல் [சக]ல அன்னிய வஸ்திரங்களையும் பஹிஷ்[கரி]த்துக் கொண்டிருக்கிறோம். பிரிட்[டிஷ்] வஸ்திர பஹிஷ்காரம் அர்த்தமற்றது. [அன்]னிய வஸ்திர பஹிஷ்காரம் நம் மதக் [கட]மையாகும். அன்னிய வஸ்திரங்களைக் [கொ]ளுத்துவது பிறர் பாலுள்ள குரோதத்தால் அல்ல; நாம் முன் செய்த பாபங்களுக்குரிய பரிகாரமாகவேதான். கொளுத்துவதால் சுதேச வஸ்திரங்களின் உற்பத்தி அதிகரிக்கும் என்பது தெளிவாய்த் தெரியும்".

இவ்விதம் மஹாத்மா சொல்லி யிருக்க, மித்ரன் பிரிட்டிஷ்வஸ்து பஹிஷ்காரத்தை ஒப்புக்கொண்டதாகவும், பிரிட்டிஷ் வஸ்திரங்களையே கொளுத்தியதாகவும், அப்படி பிரிட்டிஷ் வஸ்திரங்களை மட்டும் கொளுத்துவதால் குரோதம் ஜனிக்காதென்று அவர் எதிர் பார்க்காததாகவும், அப்படிக் கொளுத்தி பிரிட்டிஷாருக்குக் கஷ்டநஷ்டங்கள் உண்டு பண்ணுவதே அவர் நோக்கமாயிருந்ததாகவும் எழுதியிருப்பது எதற்காகவோ?

"பிரிட்டிஷ் சாமான்கள் என்பதற்குப் பதிலாகவே அன்னிய சாமான்கள் என்று தீர்மானத்தில் சேர்க்கப் பட்டதாகவே நாம் நினைக்கிறோம். அது கிரமமான இராஜீயக் கருவியென்றே நாம் சாதிக்கிறோம்" என்றும் மித்ரன் கூறுகிறான். "எத்தனையோ பெரியோர்கூடி யெழுதிய தீர்மானத்தில் அவர்கள் ஒன்றை நினைத்து மற்றொன்றை எழுதி விட்டதாக இரண்டு வருஷங்கள் ஆனபின் கூறும் மித்ரன், அச்சமயம் எங்கிருந்தான்? கல்கத்தா காங்கிரஸ் விஷயாலோசனைக் கமிட்டியில் அப்பொழுது பிரசன்னமாய் இருக்க வில்லையோ? ஒரு வேளை பிரசன்னமாயிருந்து தீர்மானம் எழுதப்படும் பொழுதும் பின் காங்கிரசில் தீர்மானிக்கப் படும்பொழுதும் தூங்கி இப்பொழுது தான் விழித்துக்கொண்டானோ? கும்பகர்ணனுக்கு அண்ணனுய்த் தூங்கி எழுந்த மித்திரன் எதையானுலும் சாதிப்பான் என்பதில் ஆச்சரியமில்லை. ஆனல் மஹாத்மாவின் கொள்கையைத் திரித்துக் கூறும் அவன் மொழிகளை நேயர்கள் அலக்ஷியம் செய்வர் என்று நம்புகிறேன்.

கடைசியாக, மித்ரன் தன் முதல் பக்கத்தில் வரைந்திருக்கும்,

> 'யாமெய்யாக் கண்ட வற்றுள் இல்லை
> எனைத் தொன்றும் வாய்மையின் நல்லபிற'

என்னும் திருக்குறளை மறவாதிருக்க வேண்டுகிறேன்.

### தூத்துக்குடி சைவசித்தாந்த சபை

19-ஆம் ஆண்டு நிறைவு விழா

டிசம்பர் 27,28-ந் தேதிகளில் கோயம்புத்தூர் நகரபரிபாலன சங்கத்தின் உபதலைவரும், நியாயவாதியுமாகிய திருவாளர் ஸி. கெ. சுப்பிரமணிய முதலியார் பி. ஏ. அவர்களின் அவைத்தலைமையில் நடைபெறும். அவ்வமயம் சைவசித்தாந்தம், தெய்வத் தமிழ்மொழி, ஒழுக்கம் முதலிய பொருள்கள் பற்றிய சொற்பொழிவுகள் அரும் பெரும் புலவர்களால் நிகழ்த்தப் பெறும் என ஷை சபைக் காரியதரிசி தெரிவிக்கிருர்.

பம்பாயைச் சேர்ந்த நீண்டப்படாத வகுப்பினர் ஸ்ரீமான் திருவேதியின் அக்கிராசனத்தில் கூட்டங் கூடித் தங்கள் குறைகளை நகரபரிபாலன சபையாரும், மற்ற முன்னேற்றச்சங்கங்களும் கவனிக்க வேண்டுமென்றும் நீண்டப்படாத வகுப்பினின்று ஒருவர் வருகிற தெரிந்தெடுப்பில் நகரபரிபாலன சபைக்கு அங்கத்தினராய் நியமிக்கப் படவேண்டு மென்றும் தீர்மானித்தார்கள்.

## லாசேன் மகாநாடு

ஜலசந்தி விஷயம்

ஐரோப்பிய சமீபக் கீழ் பிரதேச நாடுகளில் அமைதியை புண்டாக்க ஏற்பட்ட லாசேன் மகாநாடு நடைபெற்றுக் கொண்டு வருகிறது, ஜலசந்தி விஷயத்தைப் பற்றிக் கவனிப்பதற்காக இம்மாதம் 9-ந் தேதியில் கூடிய சப் கமிஷன் முன்னிலையில் துருக்கியின் பிரதிநிதியாகிய இஸ்மெத் பாஷா பின்வருமாறு காரியங்கள் நடைபெற வேண்டுமென்று கூறினர். முதலாவதாக, ஜலசந்திப் புறமாய் உள்ளநாடுகளும், மார்மோராக் கடற் புறமாய்-இருக்கும் நாடுகளும், தரைப்படையாலோ கடற்படையாலோ திடீரெனத் தாக்கப் படாமல் இருப்பதற்காக உறுதிமொழிகள் கொடுக்கப்படவேண்டும்.

இரண்டாவதாக, இத்தொகைக்கு மேலான கடற்படைகள் கருங்கடல் வழியாய்ப் போகக்கூடாதென்ற நியதி இருக்கவேண்டும். இம்மாதிரி யிருந்தால் தான் கடற்புறமாய் இருக்கும் நாடுகள் ஆபத்துக்கு உள்ளாகாமல் இருக்க முடியும். இக்கப்பற் படையில் சர்வதேச வியாபாரத்திற்கு ஹானிவர வொட்டாத வாறு தடுக்கும் சிறகப்பல்களே இருக்க வேண்டும்.

இவையல்லாமல் இன்னும் அவர் கூறிய நிபந்தனைகள் வருமாறு:—

1. ஜலசந்தியில் படைகள் இருக்கக் கூடாதென் நிருக்கிறபடியால் ஜலசந்தி என்ற வாசகத்தில் மார்மோராக் கடலைச் சேர்க்கக்கூடாது.

2. அனடோலியாவுக்கும் திரேஸுக்கும் போக்குவரவு சாதனங்களில் ரெயில்வே முக்கியமாய் இருப்பதால் பாஸ் பரஸ் ஏனுமிடத்தி விருந்து இராணுவத்தை எடுத்துவிடக்கூடாது.

3. இராணுவம் வைக்கப்படக் கூடாதென்ற பிரதேசங்களில் போக்குவரவு சாதனங்கள் இருப்பதால் இவைகளின் மூலமாய் இராணுவம் செல்லவிடப்பட வேண்டும்.

4. மார்மோராக் கடலைக் கடற்படை ஒன்றின் மூலமாய்க் காப்பதற்காகக் கான்ஸ்தாந்தி நோபிலிலும் ஜலசந்திப்பிரதேசங்களிலும் படைகளையும் கடற்படை சம்பந்தமானவைகளையும் துருக்கி வைத்துக்கொள்ள வேண்டியதாயிருக்கிறது.

5. இராணுவம் வைக்கப்படக் கூடாதென்ற பிரதேசங்கள் அதிகமாயிருக்கின்றன.

6. டார்டனல்ஸின் நுழை வாயிலுக்கு வெளியில் இருக்கும் நான்கு தீவுகளில் சாமோதிரேஸ், தெனிதாஸ், இம்புரோஸ் ஆகிய இம்மூன்று தீவுகளும் துருக்கியின் ஆட்சியில் இருக்க வேண்டும். லிம்னஸ் தீவுக்குச் சுதந்திரம் கொடுக்கப்பட்டு விட வேண்டும்.

7. கலிபோலியைத் திடீரெனத் தாக்காமல் இருப்பதற்காக எவ்வளவு படை மிகவும் இன்றியமையாததோ அவ்வளவு படையை வைத்துக்கொள்ள அநுமதிக்கப்படவேண்டும்.

## "சுயராஜ்ய யாகம்"

ஆப்டோன் படம் அமைத்த 1923-ம் வருஷத்திய அழகிய பெரிய

| | |
|---|---|
| காலண்டர் ஒன்று விலை ரூபா ... ... ... | 0—5—0 |
| ஷை 1-டஜன் ... ... ... | 3—0—0 |

தபாற்கூலி இனம்

"விவேகானந்தம்" இரண்டாவது தொகுதி முதற்பகுதி ஜனவரி மாதத்தில் வெளிவரும். வருட சந்தா ரூபா ஒன்றுதான். சந்தாத்தொகையை உடனே மணியார்டர் செய்கிறவர்களுக்கு ஷை காலண்டர் ஒன்று இனமளிக்கப்படும்.

மானேஜர்:—விவேகானந்தம் ஆபீஸ்,
54, பிடாரியார் கோவில் தெரு, சென்னை.

இனம்! இனம்! இனம்!

இதுவரையிலும் வெளிவாராதது. யாவரும் தரிசிக்கத்தக்கது.

சுவாமிகளின் சிறு உருவங்களுள்ள 20 போட்டோ பிலிம்ஸுகள் இனம்

## ஜெர்மன் ஸினேஸ்கோப்

என்னும் நூதன காக்ஷி

இத்துடன் அனுப்பும் அடியில் கண்ட சுவாமிகளின் பிலிம்ஸுகளை வைத்துப் பார்த்தால் பயாஸ்கோபில் காணுவதுபோல் ஆச்சரியமாய்த் தோன்றும். எசோத கிருஷ்ணன், கிருஷ்ண லீலை, காளிங்கமர்த்தன், கம்ஸவதம், உஷாஸ்வப்னம், கஜேந்திர மோக்ஷம் முதலான 20போட்டோ பிலிம்ஸுகள் இனமுடன் 40 பிலிம்ஸ் கொண்ட ஜெர்மன் ஸினஸ்கோப் ஒன்றுக்கு விலை ரூ. 2.

விலாசம்:—ஸிடி பிலிம் கம்பெனி, 192, தங்கசாலை தெரு, மதராஸ்.

## இந்தியாவுக்குச் சுதந்திரம் வழங்குங்கள்

பாதசாரியின் விண்ணப்பம்

சமீபத்தில் பாதவாள் சிகிச்சைச்சாலையில் மாண்ட ஸ்ரீமான் சி. செ. பினாந் என்ற ஆங்கில பாதசாரி, அமிர்தபசார் பத்திரிகாசிரியருக்கு அநேக கடிதங்கள் எழுதினர். அதில் முதல் கடிதத்தைப் பத்திரிகாசிரியர் பதிப்பித்துள்ளார். அக்கடிதத்தின் இறுதியில் அன்னார் குறிப்பிட்டிருப்பதாவது:—

என் தேசமக்களே! இந்தியா குடியேற்ற நாட்டுச் சுதந்திரத்தையாவது பூர்ண சுதந்திரத்தையாவது வேண்டுகின்றது. அந்நவை சுதந்திரத்தைப் பெற இந்தியா தீர்மானித்து விட்டிருக்கிறது. இந்தியா தன் சுதந்திரத்திற்காகப் பிரிட்டனுடன் போர் தொடுக்க விடப்பட்டால் இந்தியா அச்சுதந்திரப் போரில் வெற்றியுறும். பிரிட்டிஷ் ஆட்சிமுறை போன இடத்தில் ஐக்கிய இந்தியாவொன்று ஏற்படும். இந்தியா சுயராஜ்யத்தைப் பெறுவதற்குரியவைகளையெல்லாம் அடையாமல் இருக்கலாம். ஆனல் இந்தியா ஒருவகையான உண்மையான சுயராஜ்யத்தைப் பெற வேண்டியதை படைத்திருக்கிறது. இந்திய மக்களில் நூற்றுக்கு எழுபத்தைந்து பேர் வீதம் கல்வி அறிவில்லாதவர்களாய் இருக்கலாம். ஆயினும் இருபது வருட காலத்திற்குள் இக்குறையை நீக்கிவிடலாம். ஐரோப்பிய அறிஞர்களுக்குச் சமமாகவும் அதற்கு மேலாகவும் ஆயிரக்கணக்கான அறிஞர்கள் இந்தியாவில் இருக்கிருர்கள். அவர்கள் ஆட்சிமுறையை, இந்தியர்களாய் இருப்பதால் ஆங்கிலேயர்களைக் காட்டிலும் திறம்பட நடத்தக்கூடியவர்களாயிருக்கிருர்கள்.

குடியேற்ற நாட்டுச் சுதந்திரம் இந்தியாவுக்கு வழங்கப்படின் இந்தியர்கள் திருப்தி அடைந்து விடுவார்கள். குடியேற்ற நாட்டுச் சுதந்திரத்தை உடனே இந்தியாவுக்கு நல்காவிட்டால் பலாத்காரமற்ற வழிகளில் முழு சுதந்திரம் பெற முயற்சித்து அது கைகூடாவிடின்பலாத்காரத் துறைக்கு ஒரே பாய்ச்சலாய்ப்பாயவேண்டி நேரும். அம்மாதிரி அவர்கள் செய்தால் அதனல் இந்தியாவுக்கும் கிரேட் பிரிட்டனுக்கும் பாதகம் உண்டாகும். என் தேசமக்களே! உங்களுக்கோர் எச்சரிக்கை செய்கிறேன். விஷயங்களை ஒரே பக்கமாய்ப் பார்ப்பதை விட்டு இரு பக்கமாகவும் பாருங்கள். இதுநூறு வருட காலமாய் நீங்கள் ஐரோப்பியரின் கலத்தையே கவனித்து வந்திருக்கிறீர்கள். இப்போது மற்றொரு புறத்தைக் கண்டு இந்தியர்கள் அறிஞர்களாயும், ஐக்கியப்பட்ட இனமாயும் ஆகி விட்டிருக்கிருர்களென்பதைத் தெரிந்து கொள்ளுங்கள்.

இந்திய இனத் தலைவர்கள் எத்தகையவர்கள் என்பதைப் பரிசோதியுங்கள். அவர்களின் திறமைகளைக் கவனியுங்கள். அவர்கள் வேண்டுகோள் யாது என்பதை அறிந்து அதன்படி நடந்தால் நடங்கள்; இல்லாவிட்டால் போங்கள். அவர்கள் வேண்டுகோள்களுக்கு இணங்காவிடின், உங்கள் சிறிதளவு மதத்தைப் பார்த்து மற்றவர்கள் ஏளனஞ் செய்வார்கள்.

### அகாலியர் சச்சரவு

இந்தியச் சட்டசபை அங்கத்தின ரோதுவின் அபிப்பிராயம்

இந்தியச் சட்டசபையின் ஆங்கிலோ இந்திய அங்கத்தினரான ஒருவர் அகாலியர் கிளர்ச்சியைப் பற்றி லண்டன் டைம்ஸ் பத்திரிகையில் எழுதியிருப்பதில், சீக்கியர் குருக்களான மகந்துகள் எனச் சொல்லப்பட்டோர் நாளடைவில் ஒழுக்கீனர்களாய்ப் போய்விடவே, சீக்கியர்களுக்குள்ளேயே அகாலியர் என்ற ஒரு பிரிவினர் கிளம்பி, மகந்துக்கள் ஒழுக்க வீனர்களாய்ப் போய்விட்ட படியாலும் அதனல் அவர்கள் சீக்கிய மதத்திற்கே ஒரு களங்கத்தை உண்டாக்கி விட்டமையாலும் அவர்களின் ஆதிக்கத்திலிருந்து குருத்வாரங்கள் பிடுங்கப்பட்டு அச்சொத்துக்கள் மூலமாய் வரும் வரும்படி சீக்கிய சமூகத்தினரின் விருத்திக்கான வழிகளில் செலவழிக்கப் பட வேண்டுமென்று கூறிவருகிருர்கள் என்றும் இவர்கள் கூற்று நியாயமானதே யாகுமென்றும் ஆகவே பஞ்சாப் அரசாங்கத்தினர் குருகாபாக் சச்சரவில் அகாலியர் பக்கமாய்ச் சேர்ந்து குருத்வாரங்களைத் திருத்தி இருக்க வேண்டுமென்றும் அம்மாதிரி செய்யாமல் அவர்கள் அநுஷ்டித்த முறைகள் பெரிதும் விரும்பத்தக்கன வல்லவென்றும் இப்போது அரசாங்கத்தார் அகாலியர்களைக் கைதிசெய்வதைநிறுத்திவிட்டு குருத்வாரங்களைத் தாங்கள் ஏற்று அவைகளை நிர்வகிக்கச் சீக்கிய சமூகத்தினிடையிலிருந்தே கமிட்டியை நியமிக்க வேண்டும் என்றும் குறிப்பிடுகிருர்.

உலமாக்கள் வெளியிட்ட பத்வாவைச் சுவரொன்றில் ஒட்டியதற்காகப் பைசாதாபாத் ஸ்ரீமான் திரிபுவனநாத்தர் னன்பார் 107-வது பிரிவுபடி கைதியாக்கப்பட்டு ஒருவருடக் காவல் தண்டனைக்கு உட்படுத்தப்பட்டார்.

மாற்றுவக்கிடங்கொடேல். ஏற்பிகுகழ்ச்சி. ஓடுபெறநில். நவசக்தி

நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம் நரகத்தி லிடர்ப்படோம் நடலையில்லோம், ஏமாப்போம் பிணியறியோம் பணிவோமல்லோம் இன்பமே யெந்நாளுந் துன்பமில்லை, தாமார்க்குங் குடியல்லாத் தன்மையான சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற், கோமாற்கே நாமென்றும் மீளாவாளாய்க் கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகினோமே.—(அப்பர்.)

சென்னை 1922௵ டிசம்பர்௴ 15௳

## திருக்குறிப்பு

மகாத்மா காந்தி சிறைபுகுந்தபோது, ஹக்கீம் அஜ்மல்கான் அவர்களை நோக்கி, "நிர்மாணவேலைகளை ஒழுங்காக ஓம்பித் தேசத்தில் ஒத்துழையாத் தருமத்தை வளர்த்துவருக" என்னுங் கருத்தடங்கிய மொழிகளை வாய்மலர்ந்து சென்றார். அப்போது ஸ்ரீமான்கள் மோதிலால் நேருவும், சித்தரஞ்சனதாஸரும் சிறைபுகுந்திருந்தனர். பின்னை, இந்நாளில்,இம்மூவரும் ஒன்றுபட்டுச் சட்டசபைப் பிரவேசத்தை வலியுறுத்திவருவது அன்பர்கட்குத் தெரியும். இவர்கள் முயற்சியால் தேசத்தின் உறுதிநிலையும், ஒற்றுமை நிலையும், உண்மைநிலையுங் குலைந்துவருகின்றன.

சட்டசபைப் பிரவேசத்தைப் பற்றி மகாத்மாகாந்தியின் உள்ளக்கிடக்கையை உணர்ந்துகொள்ள இம்மூவரும் எரவாடா சிறைக்குச் செல்ல முயன்றனர். காந்தியடிகளைக் காண இத்தேச பக்தர்களுக்கு உத்தரவு அளிக்கப்பட்டது. ஸ்ரீமான் மோதிலால் நேரு காந்தியடிகளைக் காணப் பூனா சென்றார் ஆங்கே காந்தியடிகளைக் காணக் கொடுக்கப்பட்ட கட்டளை அழிக்கப்பட்டது. காந்தியடிகளைக் காணச் சென்ற நேரு அடிகள் அவரைக் காணாது திரும்பினர்.

முதலில் காந்தியடிகளைக்காண அதிகாரிகளால் வழங்கப்பட்ட உத்தரவு பின்னை அழிக்கப்பட்டதன் காரணத்தை ஊகித்துணரல் வேண்டும். காந்தியடிகள் மூவரையுங்காண மறுத்திருக்க வேண்டும். அதை ஆதாரமாகக்கொண்டு அதிகாரிகள் வழங்கப்பட்ட கட்டளையை ஒழித்திருப்பார்கள்.

காந்தியடிகள் ஏன் மறுத்திருக்க வேண்டும் என்று சிலர் வினவலாம். காந்தியடிகள் உடல் அதிகாரவர்க்கத்தார் சிறையில் கட்டுப்பட்டுக்கிடக்கிறது. அன்னார் ஆத்மசக்தி, எவர்கட்டுக்கு மடங்காது, உலகில் உலவுகிறது. அச்சக்தியின் வழித்தேசத் தலைவர்கள் நடத்தல் வேண்டும். அதைவிடுத்துச் சிறை நோக்கி அடிகளுடன் சட்டசபைப் பிரவேசத்தைப்பற்றிப் பேச முயன்றது பெருந்தவறு. சிறையிலுள்ள மகாத்மா சட்டசபைப் பிரவேசத்தைப்பற்றிச் சம்பாஷிக்கவும் மாட்டார். என்னை? சத்திய நெறிக்கு அது விரோதமாகலான்.

சட்டசபைப் பிரவேசம் என்பதன் பொருள் ஒத்துழைப்பதே யாகும் சட்டசபைப் பிரவேசத்தில் பல கட்சிகளிருக்கலாம். அவைகளெல்லாவற்றையும் திரட்டி எடுத்துப்பார்த்தால், அவைகள் யாவும் ஒத்துழையா இயக்கத்தின் கழுத்தைஅறுக்குங் கத்திபோலப் பரிணமிக்குங் கருவியாகத் தோன்றும். காந்தியடிகள் ஒத்துழையா விரதத்தை அனுஷ்டித்த காரணத்தால் சிறைக்குள் நுழைக்கப்பட்டார். அன்னார் சட்டசபைப் பிரவேசத்தை அங்கீகரிப்பாராயின், அவர் தருமத்துக்கே அவர் மாறாக நடந்தவராவார். காந்தியடிகள், ஒத்துழையாத் திட்டங்களுள் எதை மாற்ற ஒருப்பட்டாலும் படுவர்; சட்டசபைப் பகிஷ்காரத்தை மாத்திரம் மாற்ற ஒருப்படவே மாட்டார். சட்டசபைப் பகிஷ்காரம் ஒத்துழையா மூலம் என்பதைப்பற்றிச் சென்ற வாரங்களில் விரிவாக எழுதினோம். காந்தியடிகள் சட்டசபைப் பிரவேசத்தை இன்று ஒத்துக்கொள்வாராயின் நாளை அவர் விடுதலை அடைவது திண்ணம். காந்தியடிகள் நீதிபதி முன்னர்வழங்கிய அறிக்கையில் "நான் வெளியிலிருந்தால் ஒத்துழையாமை வழி நின்று எனது வேலையைச் செய்து கொண்டிருப்பேன்" என்று மொழிந்த வாசகங்களை ஸ்ரீமான் நேரு மறந்து விட்டார் போலும்! ஸ்ரீமான்கள் மூவரும் தமது செல்வாக்கால் காந்தியடிகளைத் தம் வசப்படுத்தி விடலாம் என்று எண்ணினர் போலும்!

காந்தியடிகளைப் பார்க்கச்சென்ற இம்மூவரும் தம் கொள்கைக்கு மாறுபட்ட சட்டசபைப் பகிஷ்காரக்காரருள் ஒருவரையாவது ஏன் உடனழைத்துச் செல்ல உளங்கொள்ளவில்லை! காந்தியடிகள் முன்னிலையில் இருசாரார் உரைகளுமல்லவோ கிளத்தப்படல் வேண்டும்? மனித முயற்சி சித்திக்கவில்லை.

முதலில் உத்தரவு கொடுக்கப்பட்டுப் பின்னர்க் கெடுக்கப்பட்டதன் திருக்குறிப்பைச் சத்தியவான்கள் கவனித்தல் வேண்டும்.

"என்னைக் கைவிட்டீர்; ஒத்துழையாமையை ஒடுக்க முயல்கிறீர்; நிர்மாண வேலையைக் குலைக்கிறீர்; உம்மைப் பாரேன்; ஒத்துழையாமையைவளர்க்கப் பத்து உண்மையாளரிருந்தால் போதும்" என்று காந்தியடிகள் உள்ளத்தெழுந்த திருக் குறிப்பாக நாம் கொள்கிறோம். காந்தியடிகள் சந்திப்பைக் கூட்டாத திருவருளுக்கு வணக்கம். காந்தியடிகள் ஆன்ம சக்தி தேச முழுவதும் பாவித் தாண்டவம் புரிகிறது. அதன் வழி நடப்போமாக.

## பிரயத்தனம் பயன்படுமோ?

கங்கையைக் கொணர்வோ பகீரதன் பிரயத்தனப்பட்டதைப் புராணங்களில் நாம் வாசித்திருக்கிறோம். ஆனால் இப்பொழுது சட்டசபைப் பிரவேசக்காரர், ஆவேசத்துடன் செய்யும் முயற்சிகள் பகீரதனுடைய பிரயத்தனங்களைக் கடந்து நிற்கின்றன. பகீரதன் கங்கைக்காகத் தவஞ்செய்தான்; சத்தியத்தை அணிகலனைக் கொண்டான்; உறுதியைக் கடைப்பிடித்தான். ஆனால் சட்டசபைப் பிரவேசக்காரர்—? அவர்செயலை எங்ஙனம் வருணிப்பது?

சட்டசபைப் பிரவேசக் கட்சியாருக்குப் பணம் இருக்கிறது; பத்திரிகைகள் இருக்கின்றன. இவைகளைக்கொண்டு அவர்கள் ஆரவாரம் செய்கிறார்கள். இவர்கள் ஆரவாரத்தை நாம் போற்றுகிறோம். ஆனால் இவர்கள்பால் தங்கி நிற்கும் சத்தியத்திற்கு இரங்குகிறோம்.

சென்னையிலுள்ள காங்கிரஸ் காரரிற் சிலர் முன்னொருமுறை- எல்லா இந்திய காங்கிரஸ் கமிட்டி கூட்டம் கல்கத்தாவில் நடைபெற்றுக் கொண்டிருந்த காலையில் - ஒருதந்தி விடுத்ததைப்பற்றி நாம் எழுதியிருந்ததை நேயர்கள் மறந்திருக்க மாட்டார்கள். இதுகாலை அத்தந்திச் சகோதரர்கள் உள்ளிட்ட சிலர், காங்கிரஸ் தலைவரான தாஸருக்கு ஓர் அறிக்கை அனுப்பியுள்ளார். இந்த அறிக்கையில் இரண்டு மணிகள் காணப் படுகின்றன.

"இந்த மாகாணத்தில் காங்கிரஸ் ஸ்தாபனங்கள் இருந்துவரும் ரீதியில் தாங்கள் எல்லோரும் பிரதிநிதிகளாகத் தெரிந் தெடுக்கப் படுவது அசாத்தியமாக இருக்கிறதென்றும்" ஆதலால் இவ்வாறு அறிக்கை மூலமாகத் தங்கள் அபிப்பிராயத்தைத் தெரிவித்துக் கொள்வதாகவும் இவர் கூறுகின்றனர். இதனால் தற்போதைய காங்கிரஸ் ஸ்தாபனங்களின் 'ரீதி' ஒழுங்கற்றதாய் இருக்கிறது என்பது இவர் கொள்கைபோலும். தங்கட்சியார் எல்லாரும் கயை காங்கிரஸ் பிரதிநிதிகளாகத் தெரிந்தெடுக்கப் பட்டுவிட்டால் காங்கிரஸ் ஸ்தாபனங்களின் 'ரீதி' சரிப்பட்டுவிடுமா? ஜனநாயக முறையை அவாவுறும் அறிக்கை கனவான்கள் தங்கட்சியாரே பிரதிநிதிகளாகத் தெரிந்தெடுக்கப்படவேண்டுமென்று விரும்புவது விநோதமாகவே இருக்கிறது. இவ்வறிக்கையில் கையெழுத்திட்டுள்ள கனவான்களிற் பலர் காங்கிரஸ் பிரதிநிதிகளாகத் தெரிந் தெடுக்கப் பட்டிருக்கிறார்கள். இப்பொழுதுள்ள காங்கிரஸ் ஸ்தாபனங்கள் சட்டசபை பகிஷ்காரத்தை ஆதரிப்போரை மட்டும் பிரதிநிதிகளாகத் தெரிந்தெடுக்கவில்லை. திருப்பூரில் கூடிய தமிழ் நாட்டுக் காங்கிரஸ் கமிட்டி கூட்டத்தில் சட்டசபைப் பிரவேசக் கட்சியைச்சேர்ந்த ஸ்ரீமான்கள் அரங்கசாமி ஐயங்கார், சத்திய மூர்த்தி, எஸ். ஸ்ரீனிவாச ஐயங்கார் முதலியோர் எல்லா இந்திய காங்கிரஸ் கமிட்டிக்கு அங்கத்தினர் களாகத் தெரிந்தெடுக்கப்பட்டிருக்கிறார்கள். இவைகளினால் தற்போதைய காங்கிரஸ் ஸ்தாபனங்கள் ஒரு கட்சியாரை மாத்திரம் தெரிந்தெடுக்கவில்லை யென்று நன்கு புலனாகும்.

தங்கட்சியார் எல்லோரும் பிரதிநிதிகளாகத் தெரிந்தெடுக்கப்பட வில்லை யென்று இவ்வறிக்கையாளர் வருத்தப்பட்டால் அதற்கு யார் என்ன செய்யலாம்? அதற்காக ஸ்தாபனங்களின் மீது குறை கூறுவது எங்ஙனம் பொருந்தும்? ஒரு காலத்தில் ஒரு கட்சியார் ஏற்ற முற்றிருப்பர், மற்றொரு கட்சியார் குறை வாயிருப்பர். இதை அரசியல் நிபுணர்கள் என்று பெயர் படைத்த ஸ்ரீமான்கள் அரங்கசாமி ஐயங்காரும் சத்திய மூர்த்தியும் அறியாமலிருக்க மாட்டார்கள். இப்பொழுதுள்ள பார்லிமெண்டில் குறுகிய கட்சியார் ஆக்கம் பெற்றிருக்கின்றனர்; இதைக் கண்டு லாயிட் ஜார்ஜின் தாராளக் கட்சியார் ஆத்திரங் கொண்டு, பார்லிமெண்டின் 'ரீதி' யே சரியாக இல்லை என்று கூறினால் எவ்வளவு அழகாயிருக்கும் என்பதை நேயர்கள் கவனிப்பார்களாக. எந்தெந்தக் கட்சியார் செல்வாக்குப் பெற்றிருக்கின்றனரோ அந்தந்தக் கட்சியார் ஒவ்வொரு காலத்தில் ஆதிக்கம் வகித்துக் கொண்டிருப்பர். இந்த ஆட்சி முறை அமைப்பை அறிந்த அனைவர்க்கும் தெரிந்த உண்மை. இதை அறிக்கைக் கட்சியார் தெரிந்தும் தெரியாமலிருப்பது விநோதமே.

சட்டசபைப் பிரவேசத்தை இம்மாகாணத்திலுள்ள பெரும்பாலோர் ஆதரிக்கின்றனர் என்று இவர் கூறியிருந்ததை முன்னர்க் கண்டித்தோம்; இப்பொழுது கூறியிருப்பதையும் கண்டிக்கிறோம். சட்டசபைப் பிரவேசத்தைப் பெரும்பான்மையோர் ஆதரித்திருந்தால், இவர், தங்கட்சியார் எல்லாரும் பிரதிநிதிகளாகத் தெரிந்தெடுக்கப்பட வில்லை என்ற குறையில் மூழ்கியிருக்கமாட்டார். இதொன்றினாலேயே சட்டசபைப் பிரவேசத்தை ஆதரிப்பவர் பெரும்பான்மையாரக இல்லை என்பது பெறப்படுகிறது. இதை அறிக்கை கனவான்கள் அறியாமலில்லை. ஆனால் தங்கட்சியை வலுப்படுத்தும் பொருட்டுப்பொய்யை மெய்யாகக் கொள்வது இக்காலத்துச் சிலருடைய வழக்கமா யிருக்கிறது. அவ் வழக்கம் இவ்வறிக்கைக் காரரைப் பற்றிக் கொண்டது போலும்!

சத்தியத்திற்கு எதிரே, மகாத்மா காந்தியின் ஆணைக்கு முன்னே, சுதந்திர ஒளிக்கு நேரே இவருடைய முயற்சிகள் என்ன பயன்படும் என்று கேட்கிறோம்.

## பிரதிநிதிகளுக்கு ஒரு விண்ணப்பம்

புத்தர் பெருமான் மெய்யுண பெற்று அறம்வளர்த்த புண்ணிய திரமாகிய கயையில் இம்முறை காங்கிரஸ் கூடுகிறது. அதற்குப் நிதிகள் தெரிந்தெடுக்கப் பட்டிருக் கள். காங்கரஸுக்குச் செல்லும் நிதிகளை நோக்கி ஒரு விண்ணப் செய்து கொள்கிறோம்.

சட்டசபைப் பிரவேசக்காரர் நிதிகள் தேர்தலில் எவ்வளவு சூழ்ச் செய்யவேண்டுமோ அவ்வளவு சூழ் கள் செய்து வருகிறார். அவ 'சட்டசபைப் பகிஷ்காரர் சூழ்ச் செய்கிறார்கள்' என்று பேசிக்கொண் எழுதிக்கொண்டுந்தாங்கள்,சட்டசப பிரவேசத்தை ஆதரிக்கும் தங்கள் தார்களைப் பிரதிநிதிகளாகத் திரட் செல்ல முயல்கிறார்கள்.

வங்காளத் தலைவர் ஒருவர்க்கும் னைக்கனுள்ள சிலதலைவர்க்குமிடை தந்திப் பறவை பறந்து செய்திகொ மீள்வதாகவும், பணம் நடமாடுவதாக நமக்கு நம்பிக்கையுள்ள ஒருநிருபர் விக்கிறார். அந்நிருபத்தை முற்றும் பிட எமது மனம் ஒருப்படவில்லை. பகுதிகளை நீக்கியே வெளியிட்டு றோம். நேயர்கள் அதைக் கவனிக்

நெறியல்லா நெறிபற்றிப் பிரதி ளைத் திரட்டிச் சென்று வெற்றிக் நாட்டினால்,உண்மைநெறிநின்று தே மேற்கொள்ளச் சத்தியாக்கிரகிகள் மாயிருக்கிறார்கள். ஆனாலும் காந் கள் சீடர்கள், ஒத்துழையா நேயர் சட்டசபைப் பகிஷ்காரக்காரர்கள் சிக்கையா யிருக்குமாறு விண்ணப் துக்கொள்கிறோம். பணத்தால் எல் முடிக்கலாம் என்று சட்டசபைப் வேசக்காரர் முயன்று வருவதால், அன்பர்களை எச்சரிக்க முற்படுகிறோ

கயை புண்ணிய க்ஷேத்திர லால் அதைக் காண வேண்டுமென் அவாவால் சிலர் சட்டசபைப் பிரவே தை ஆதரிக்க உறுதிமொழிகூறிப் ப வாங்குவதாகவும் அறிகிறோம். கா யடிகள் சந்நிதியில் ஒளிமழுங்கிக்கி சிலர், சட்டசபைப்பிரவேசத்தை உள் கொண்டு ஜனங்களிடத்தில் செல்வா பெற ஒத்துழையா நடம்புரிந்த என்றும் வெளிப்படையாகச் சபைப் பிரவேசத்தை ஆதரித்த இவரனைவரும் இப்பொழுது ஒ பட்டு முயற்சி செய்கிறார். இதுகா ஒத்துழையா வேஷந் தரித்து நடி ஜனங்கள் செல்வாக்கு பெற்றுள்ள சூழ்ச்சி ஜனங்கள் மனோ நிலையை மா றுதும் மாற்றும். ஆனால் சத் விரைவில் விளங்கிவிடும்.

சட்டசபைப் பிரவேசக்காரர் வ னைச் சூழ்ச்சிக்கிடையில் சத்தியாக் பிரதிநிதிகள் தங்கள் கடமையை வேற்றி வருகிறார்கள். சட்டசபைப் வேசத்தைச் சத்திய நெறிநின்று மார ஆதரிக்கும் பிரதிநிதிகளைப் நாம் ஒன்றும் கூற முற்படவில்லை. ப துக்காகக் குணத்தை விற்கும் சகோ களுக்குப் பெரிதுமிரங்குகிறோம்.

கயை காங்கிரஸுக்குச் செல் பிரதிநிதிகள் சட்டசபைப் பிரவே தின் மீது சிந்தைச் செலுத்தவேண் வது அநாவசியம். அவர்கள் ஒ மையா இயக்கம் வெற்றிபெற்றதா பதைச் சிந்திக்கவேண்டும்; அவ்வியக் துக்கு வெற்றி உண்டுபண்ண " நிர்மாண வேலைகளை எவ்வளவு து நிறைவேற்றினோம்" என்பதைச் சிந் வேண்டும்; ஒத்துழையா இயக் சிறிது தலைகாட்டி முறிவல் செய் இவ்வேளையில் அதன் கழுத்தை கச் சட்டசபையில் நுழையலாமா பதைச் சிந்திக்கவேண்டும். இவ்வழி சிந்தைசெலுத்தி ஆராய்ந்தால் உண் விளங்கும். சட்டசபைப் பிரவே காரர் செய்யும் ஆரவாரத்தால் மயங் லாகாது.

பிரதிநிதிகளே! இப்பொழுது சட் சபைப் பிரவேசம் ஏற்றதா? பஞ்சா கொலைக்கு நியாயம் பிறந்து விட்ட? கிலாபத்துக்கு நியாயம் பிறந்து ட்டதா? நமது தேசம் சுயராஜ்ஜியம் ற்று விட்டதா? இப்பொழுது சட்ட பையை ஏன் நினைக்கிறீர்கள்? ஞ் சாப் படுகொலையில் மாண்ட ர்கள் உங்களை நோக்கிக் கொண் க்கின்றன; முஸ்லீம் உலகம் உங் ா நோக்குகிறது; பாரத மாதா உங் ா நோக்குகிறாள்; ஏழைகளைக் கண் ர் விடச் செய்யாதேயுங்கள்; சத்தி தைக் கைவிடாதேயுங்கள்; உலகத் க்கே ஒரு மஹாத்மாவாக விளங்கும் ரியார் சட்டசபை பகிஷ்காரம் சட்ட பை பகிஷ்காரம் என்று உபதேசித்த ரணத்தால் சிறையிலிருக்க, நீங்கள் டசபையைக் கருதலாமா? துரோகஞ் ய்யாதேயுங்கள். சட்டசபை பகிஷ் ர தீர்மானத்தை காங்கரஸில் ஆதரி ங்கள்.

## நேஷனல் கிளப் வேடிக்கை!

சென்னையில் "நேஷனல் கிளப்" ன்றொரு கிளப் இருக்கிறது. அது சிய சமாஜம் என்று சொல்லப்படு து. அந்தச் சமாஜ அரங்கத்தில் ம் ஞாயிற்றுக்கிழமை பிற்பகல் ன்கு மணிக்கு ஒரு நாடகம் நடிக்கப் மென்று பத்திரிகைகள் அறிவிக்கின் . அது போழ்து நமது மாஜி அட்வ ட் ஜெனரல் ஸ்ரீமான் எஸ். ஸ்ரீநிவாச பங்கார் அக்கிராசனம் வகிக்கப் போகி ர். அவர் சந்நிதி முன் சட்டசபைப் ரவேசப் பாட்டுகள் பாடப்படும். சட்ட பை பகிஷ்காரக் கூத்தும் ஆடப்படும். ட்டசபைப் பிரவேசத்தைப் பற்றி ஸ்ரீ ன்கள் ஏ. அரங்கசாமி ஐயங்காரும் த்தியமூர்த்தி ஐயரும் பேசுவார். சட்ட பை பகிஷ்காரத்தைப் பற்றி ஸ்ரீமான் ன் பாஷியம் ஐயங்காரும், பதஞ்சலி ாஸ்திரியும் நடித்துப் பேசப் போகிறார் ளாம். இஃதென்ன வேடிக்கை?

சட்டசபைப் பிரவேசத்தைப்பற்றிப் பசுவோர் என்றும் ஒரு நிலையிலிருப்ப ர். பகிஷ்காரத்தைப்பற்றிப் பேச முன் ந்துள்ள இரண்டு நண்பரும் சட்ட பைப் பிரவேசத்தில் பற்றில்லாதவரா ன்பதை அறிய விரும்புகிறோம். சட்ட பை பகிஷ்காரத்தைப்பற்றிப் பேசச் சன்னையில் வேறு நண்பர்களில்லையோ? க்கிராசனம் வகிக்க இசைந்துள்ள யங்காரும் சட்டசபை பகிஷ்காரத்தை றுதியாக ஆதரிப்பவரல்லர் என்பது வர் சமீபத்தில்வெளியிட்ட ஓர் அறிக் கையால் தெரியவருகிறது. எனவே அக் ராசனர், பேசும் இருசாரார் எல்லாரும் ட்டசபைப் பிரவேசமென்னும் ஒரு ளத்து நண்டுகளேயாம். இவர் கூடிப் பசும் அரங்கத்தை நாடக அரங்க மன்று கூறுவது நியாயம். இவ்வேடிக் கைகள் எற்றுக்கு?

## காந்தியடிகள் தினம்

அடுத்த திங்கட்கிழமையுடன் காந்தி டிகள் சிறைப்பட்டுப் பத்து மாதங்களா ன்றன. அவர் சிறைப்பட்ட காலத் ல் நாம் எங்கிலையிலிருந்தோம், பத்து ாதங்களுக்குப் பிறகு இப்பொழுது ந்நிலை யிருக்கிறோம் என்பதை ஒவ் வாருவரும் ஆராய்ச்சி செய்ய வேண் ம். சட்ட சபையில் நுழையலாமா ட்டாதா என்பதைப் பற்றிய வாதம் தலை க்கியாடும் இக்காலத்தில் காந்தியடி ளையும் அவர் உபதேசங்களையுங் பலர் றந்து நிற்கின்றனர். வீடு கட்டுதல் ந் நமை; கட்டி முடித்த பின்னர் தைக் குறை கூறுவதற்குப் பலர் தோ றி விடுவர். அதைப் போல் 'இந்தியர் ளின் குறைகளைப் பரிகரிக்கக் கூடிய ரு திட்டத்தைத் தயார் செய்ய எவரும் ன் வாராதிருந்த போதிலும், காந்தியடி ள் ஒரு திட்டத்தை அமைத்தவுடன் தில் குறை காணப் பலர் முன் வருகின் னர். ஒத்துழையா இயக்கத்தின் நிர் மாண திட்டங்களைச் சரிவர அநுஷ்டியா ல் திட்டத்தை மாற்ற வேண்டுமென்று றுவது பெருந்தன்மையாகாது. சுதேசியத்திலும் மதுவிலக்கிலும் சுயராஜ்யம் வருமா என்ற அவநம்பிக்கை கொண்டு வேலை செய்வோரை நாம் பாராட்ட முடியாது. எவ்விஷயத்திலும் நம்பிக்கை வேண்டும். காந்தியடிகள் சிறைக்குச் சென்ற காலை கதர் என்ற ஓரே மொழியில் தமது விருப்பத்தை, தம் அநுபவத்தைக் காட்டினர். படிகளை ஏறுமல் ஒரு மாடியை அடைய முடியாது. அதுபோல் சுயராஜ்யத்தை அடையச் சுதேசியம், மதுவிலக்கு, தீண்டாமை ஒழிவு முதலிய படிகளைக் கடத்தல் அவசியம். இதை நமது அன்பரிற் சிலர் மறந்துவிடுவது விநோதமாகவே இருக்கிறது. காந்தியடிகள் வெளியிலிருந்தவரையில் அவருடைய மேளத்திற்குத் தாளம் போட்ட தேசிய வாதிகள், அவர் சிறை சென்றதும் தங்கள் தாளத்தை மாற்றிக் கொண்டார்கள். தாங்கள் செய்யும் காரியங்கள் மகாத்மாவுக்கு நன்மை செய்வதாகுமா வென்பதை இந்தத் தேசியவாதிகள் காந்தி தினத்தன்று ஆலோசித்துப் பார்ப்பார்களாக.

அடிக்கடி தோன்றி மறையும் இந்த அரசியல் வாதங்களை ஒருபுறம் தள்ளி விட்டு, தேசியவாதிகள் அனைவரும் காந்தி திருநாளைக் கொண்டாட வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறோம்.

காந்தியடிகள் இந்தியாவுக்கு உயிரனையார்; உலகத்திற் குடலனையார். அஹிம்சைமதத்தை உலகத்தில் தோற்றுவித்தவர் அவரே. காந்தி மதம் என்று ஒரு மதம் பிற்காலத்தில் இந்தியாவில்—உலகத்தில்—செழித்தோங்கப் போகிறது என்பதை ஒவ்வொருவரும் உணர்ந்து கொள்ளவேண்டும். அந்த மதத்தை செழிக்கச் செய்ய வேண்டியவர்கள் நாமே. இந்தியா பண்டை நிலைமையை யடைய வேண்டுமானல் காந்தியடிகளின் கொள்கைகளைப் பின்பற்ற வேண்டியது அவசியம்.

காந்தியடிகளின் திட்டங்களில் இதுகாறும் அவநம்பிக்கை கொண்டிருந்த அன்பர்கள் அடுத்த காந்தி தினம் முதலேனும் அத்திட்டங்களை அநுஷ்டிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறோம். நம் பொருட்டு, தமது பெண்டு பிள்ளைகளைத் துறந்து சிறைவாசம் செய்து வரும் காந்தியடிகளை மறந்து விதேசிய ஆடைகளை அணிந்து கொண்டிருப்பது தேசத் துரோகம் செய்வதாகும்; நன்றி கொன்றதாகும்.

ஆதலின் அடுத்த திங்கட்கிழமை இந்தியர்கள் அனைவரும் காந்தியடிகளை மறவாமல் அத்திரு நாளைக் கொண்டாட வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறோம்.

## இடியேறு

### 'நவசக்தி' க்கு நன்கொடை

கண்டரமாணிக்கத்தைச் சேர்ந்த ஸ்ரீமான் வி. சா. காசிவிசுவநாதன் செட்டியார் அவர்களுடைய சகோதரனின் திருமணத்தில் 'நவசக்தி'க்கு ஐந்து ரூபாய் சம்பாவனை செய்யப் பட்டது. இதனை வந்தனத்துடன் பெற்றுக் கொண்டோம்.

### மன்னிக்க

சென்ற வாரம் முதல் பக்கத்தில் சிலம் பொலியில் "இன்ப வாழ்வு" என்ற மகுடமிட்டு ஒரு கட்டுரை வரைந்து, பூர்த்தி செய்யாது, தொடரும் என்று விட்டிருந்தோம். சட்டசபை பகிஷ்காரக்கிடங்கள் பலவந்து குவிதலால், அவற்றுள் சில வாதல் வெளியிட வேண்டிய அவசியம் ஏற்பட்டமையால், அக் கட்டுரையை இவ்வாரமும் பூர்த்தி செய்ய முயலவில்லை. நேயர்கள் மன்னிக்க.

### காங்கிரஸும் அதிகாரிகளும்

காங்கிரஸ் மகாநாடு கடை பெறுவதற்கு முன்னரே, அது நடைபெறும் இடத்தையும் பிரதிநிதிகள் தங்கு மிடத்தையும் பீஹார் ஒரிஸா அரசாங்கத்து நிர்வாக அங்கத்தினர் மேற் பார்வை செய்து விட்டேன்தார். ஏற்பாடுகள் யாவும் திருப்திகரமாகவே இருப்பதாக அவர் கூறினரென்று தெரிகிறது. ஆனால் காங்கிரசின் கடை முறைகள் அவருக்குத் திருப்தியளிக்குமோ?

### கயா மகாத்மியம்

ஓர் பெயர் கொண்ட ஒரு சிறு நூல் சுவாமி அற்புதானந்தர் அவர்களால் எழுதப்பட்டு அச்சிலிருக்கிறது. பிழைதிருத்தப்பட்ட பிரதியொன்று எமது பார்வைக்குவந்தது. கயைக்குச் செல்லும் பிரதிநிதிகளுக்கு அந்நூல் பயன்தரும். வேண்டுவோர் சுவாமி அற்புதானந்தர், தென்னிந்திய சாது மகாமண்டலம், 1-1, குலாம்முர்தஸா தெரு, மவுண்ரோட், மதராஸ் என்ற விலாசத்துக்கு நான்கு அணா ஸ்டாம்பு அனுப்புவாராக.

### கட்டணங்களின் உயர்வு

சென்னைச் சர்வகலாசாலை சங்கத்தார் பரீட்சை கட்டணங்களை உயர்த்தியிருக்கின்றனர். சர்வகலாசாலையின் வருவாய்போதவில்லையாம். இக்கல்வி முறையில் ஈடுபட்டுள்ள பலர்க்கு இது பெரிதும் வருத்தத்தைக் கொடுக்கும் என்பதில் ஐயமில்லை. தற்காலக் கல்வியினால் எத்தனையோ குடும்பங்கள் ஏழ்மையாகிவிட்டன. இப்பொழுதுள்ள பள்ளிக்கூடக் கட்டணங்கள் அதிகமாயிருக்கின்றன என்று அவதிப்படும் மாணவர்கள் பரீட்சா கட்டணங்கள் உயர்த்தப்பட்டதைப் பற்றி கேட்குறுவார்கள். இவர்களுக்கு கமது அநுதாபம்.

### ஆப்கன் அமீர்

இப்பொழுது ஆண்டுவரும் ஆப்கன் அமீர் மிகுந்த சிக்கன முள்ளவராகவும் தம் குடிகளின் நன்மையையே பெரிதும் கருதுபவராகவும் இருக்கிறரென்பதற்குப் பல அறிகுறிகள் காணக் கிடக்கின்றன. சுதேசியத்தில் இவருக்கு நிரம்பப்பற்று இருப்பதாகத் தெரிகிறது. இவர் கதராடையே தரிக்கிறார் என்பது நேயர்களறிந்த விஷயம். ஒரு சமயத்தில் இவர் தம்மோடு விருந்துண்ணவந்தவர்கள் அணிந்திருந்த அந்நிய நாட்டுத் துணிகளையும் பூட்ஸ்களையும் கத்தரிக்கோல் கொண்டு கிழித்தார் என்று இவருடன் அளவளாவி வந்த ஓர் இத்தாலியர் கூறுகிறார். சுதேசியத்தை வெறுக்கும் அன்பர்கள் இதனின்றும் ஒரு பாடம் கற்றுக் கொள்ளலாம்.

### பாராட்டுகிறோம்

சென்னை இராஜதானிக் கல்லூரியின் ஸ்தாபன தினக்கொண்டாட்டம் சமீபத்தில் கொண்டாடப்பட்டது. அதுகாலை தலைமை வகித்த ஸ்ரீமான் இராமராய நிங்கார், இராஜதானிக் கல்லூரி மாணவர்கள் நிதான புத்திக்கும் அமைதிக்கும் பெயர் பெற்றவர் களென்றும் சமீபத்தில் தோன்றிய அரசியல் இயக்கத்தில் அவர்கள் கலந்துகொள்ளாமலிருந்ததைப் பற்றிச் சென்ற வருஷம் கவர்னர் பாராட்டினார் என்றும் அப்பெயருக்குத் தகுந்தபடி மாணவர்கள் இனிநடந்துகொள்ள வேண்டுமென்றும் கூறினர். ஒத்துழையா இயக்கத்தில் அநுதாப மில்லாமல், மாணவர்கள் பள்ளிபகிஷ்காரம் செய்யவில்லை யென்பதை இவர் கவனிக்க வேண்டும்.

### உள்நாட்டுக் குழப்பம்

ஐர்லாந்தில் புதிய அரசாங்கம் ஏற்பட்டுவிட்டது. புதிய கவர்னர் ஜெனரலும் நியமிக்கப்பட்டு விட்டார். ஆனல் உள்நாட்டுக் குழப்பம் மட்டும் நின்றபாடில்லை. தவேலரா கட்சியார் அரசாங்கக் கட்சியினரின் சில உத்தியோகஸ்தர்களைக் கொன்று விட்டனர். இதற்குப் பதிலாக அரசாங்கக் கட்சியார், சிறையில் இருந்த எதிர் கட்சித்தலை வரிற்சிலரைத் தூக்கிலிட்டு விட்டனர். தவேலரா கட்சியார், இவைகளுக் கெல்லாம் தாங்கள் அஞ்சப் போவதில்லை யென்றும், எவ்வாருக வேனும் குடியரசு பெறுவதே தங்கள் நோக்கமாக இருக்குமென்றும் ஓர் அறிக்கை வெளியிட்டிருக்கின்றனர். இச் சம்பவங்கள் எவருக்கும் வருத்தத்தைத் தரும் என்பதில் ஐயமில்லை. ஐப்பிணக்குகள் எப்பொழுது ஒழியும்?

### மாகாணக் கப்பம்

சென்னை மாகாண அரசாங்கம் இந்தியா அரசாங்கத்திற்கு இப்பொழுது செலுத்தி வரும் கப்பத்தைக் குறைக்க வேண்டுமென்பதைப் பற்றி 'மெயில்' பத்திரிகை செய்த கிளர்ச்சி சொல்லத் தரமன்று. அக்கப்பம் சம்பந்தமாக அதிகாரக் கட்சியார் கூறிய ஆவேச மொழிகளுக்கு அளவில்லை. ஆனால், மாகாணக் கட்டணங்கள் விஷயத்தை இப்பொழுது பிரஸ்தாபிக்கக் கூடாது என்று லார்ட் பீல் முடிவாகக் கூறி விட்டார். இனி மேற்கூறப்பட்ட சகோதரர்கள் என்ன செய்யப் போகிறார்கள்? இது சம்பந்தமாக அதிகாரக் கட்சியார் மகாநாடுகள் கூட்டலாம்; ஆரவாரமாகப் பேசலாம்; தந்திகள் மேல் தந்திகள் அடிக்கலாம். பயன் என்ன உண்டாகும்? இவ்விஷயம் சரியாக முடிவு பெறாவிட்டால் ஒத்துழையாமை செய்யப் போவதாக இவ்வன்பரிற் சிலர் கூறினர். அதை இவருக்கு மறுபடியும் நினைவூட்டுகிறோம். ஒத்துழைப்பினுல் உண்டாகும் நன்மைகள் இப்பொழுதே ஒவ்வொன்றாக வெளி வருகின்றன!

### லஜபதியின் தந்தையார்

லாலா லஜபதிராயின் தகப்பனாரான லாலா தனபதிராய் தமது எழுபத்தைந்தாவது வயதில் ஆண்டவன் திருவடி நீழலைச்சேர்ந்தனர் என்பதைக் கேட்டு இந்தியர் பெரிதும் துயருறுவர். அறிவிலும் ஆண்மையிலும் மிகுந்த தமது அரிய புத்திரர் பிரிட்டிஷ் அரசாங்கத்தாரால் சிறையில் வைக்கப் பட்டிருக்குங் காலை, இவர் மனவருத்தத்துடன் மாண்டிருக்கிறார். லாலா லஜபதிராய் தேசப்பிரஷ்டம் செய்யப்பட்டிருந்த காலத்து இவருடைய மனோநிலை எங்ஙன மிருந்திருக்கும் என்பதை நாம் இங்கு எடுத்துக்காட்ட வேண்டுவதில்லை. முதுமையையும் பொருட்படுத்தாது தேசத்தின் பொருட்டுச் சிறைச்சாலையில் தவங்கிடக்கும் லஜபதிக்கு நாம் என்ன ஆறுதல் கூறவல்லேம்? பாரதமாதாவை நோக்கி "அன்னையே! எல்லாம் உன் செயல்" என்று வணக்கம் செலுத்து மாறு அப்பெரியாரைக் கேட்டுக் கொள்கிறோம்.

### இந்தியாவின் தூதர்

ஸ்ரீமான் சீனிவாசசாஸ்திரியார் தம்முடைய சுற்றுப்பிரயாணத்தை முடித்துக் கொண்டு இந்தியாவிற்குத் திரும்பிவிட்டார். வந்ததும் தில்லிக்குச் சென்று இராஜப்பிரதிநிதியுடன் விருந்துண்டார். இப்பொழுது பம்பாயில் தங்கியிருக்கிறார். அங்குச் செய்த ஓர் உபந்யாசத்தில் தம்முடைய பிரயாணத்தினால் உண்டான நன்மைகளை எடுத்து ஓதியிருக்கிறார். குடியேற்ற நாடுகளில் இந்தியா மிகவும் தாழ்வாகக் கருதப்பட்டு வந்ததாம். தம்முடைய ஆற்றலைக்கொண்டு, இவர் இந்தியாவைச் சிறிது உயர்த்தாக்கி வைத்திருக்கிறாராம். சிறிது தான் தூக்கிவைத்திருப்பதாக ஸ்ரீமான் சாஸ்திரியார் குறிப்பிட்டதை நேயர்கள் கவனிக்கவும். எந்த விஷயத்தில் இந்தியா உயர்ந்து விட்டதென்று இங்குள்ள ஒருவர்க்கும் தெரியவில்லை. ஆனால் சாஸ்திரியாருக்கு மாத்திரம் உயர்வே தோன்றுகிறது போலும்! இவருக்குச் செலவழித்த அறுபதினாயிரம் ரூபாயை வேறே தேனும் நல்ல வழியில் செலவழித்திருந்தால்?

### மாணவர்கள்

தங்களுடைய படிப்பைத்தவிர வேறு விஷயங்களில் மாணவர்கள் தலையிடக் கூடாது என்று கம்மவரிற் சிலர் கூறிவருகின்றனர். ஆனால் ஒவ்வொரு நாட்டின் முன்னேற்றத்திற்கும் மாணவர்கள் முக்கிய காரணர்களாயிருக்கிறார்கள். எகிப்திலும் ஐர்லாந்திலும் துருக்கியிலும் சைனாவிலும் மாணவர்கள் தேசிய இயக்கங்களில் எவ்வளவு தீவிரமாகக் கலந்து உழைத்தார்கள் என்பதை நாம் கூறவேண்டுவதில்லை. ஐரோப்பிய யுத்தத்திலும் பிரிட்டிஷ் வாலிபர்கள் தங்களுடைய படிப்பை ஒரு புறத்தில் கட்டிவிட்டு தேசிய கௌரவத்தைக் காப்பாற்ற முன் வந்தார்கள். அமெரிக்காவிலுள்ள மாணவர்கள் மது விலக்குக்காகச் செய்துவரும் பிரசாரம் ஆச்சரியப்படத்தக்கதாயிருக்கிறது. இவர்கள் ஒரே வருஷத்தில் 1760 மது விலக்குப் பிரசாரங்கள் செய்திருக்கிறார்கள் என்பது குறிப்பிடத் தக்கது. நமது மாணவர்கள் தேசிய இயக்கத்தில் கலந்துகொண்டு எப்பொழுது உழைக்கப்போகிறார்கள்.?

### கஷ்டந்தான்

அடுத்த மாதத்தில் இந்தியா அரசாங்கத்துச் சட்ட அங்கத்தினர் பதவியினின்று விலகும் ஸ்ரீமான்சாப்ருவுக்குச்சமீபத்தில் ஒருவிருந்து நடைபெற்றது. அப்பொழுது ஸ்ரீமான் சாப்ரு செய்த உபந்நியாசத்தில் பின் வரும் வாக்கியங்கள் காணப்படுகின்றன:—

"......முறைகளை (இரண்டு ஆண்டுகளாக) நான் கவனித்துக் கொண்டு வந்திருக்கிறேன். அந்த நிர்வாகம் முழுவதிலும் கஷ்டங்கள் நிறைந்திருக்கின்றன என்று இப்பொழுதே எனக்குத்தெரியவந்தது. இதற்குமுன் இதை நான் உணர்ந்ததில்லை."

தாம் எண்ணியபடி 'அதிகாரவர்க்கத்தினர் அவ்வளவு கெட்டவரல்லர்' என்று இந்தியா அரசாங்கத்தில் நுழைந்த பிறகு தான் தமக்குத் தெரிய வந்தது என்று ஸ்ரீமான் சர்மா ஒருமுறை கூறியிருக்கிறார். அவருடைய சகோதரரான ஸ்ரீமான் சாப்ருவும் அதே கருத்தில் பாடுவது ஆச்சரியமல்ல. இதையே அதிகார மயக்கம் என்று ஜனங்கள் அழைக்கிறார்கள்.

### அறியாமையா?

சென்னை ஐரோப்பிய வியாபார சபையின் வருஷாந்தக்கூட்டம்சமீபத்தில் நடைபெற்றது. அப்பொழுது அக் கூட்டத்தின் தலைமை வகித்தஸ்ரீமான் அலெக்ஸாண்டர் என்பவர் ஒத்துழையாமையைப்பற்றிப்பின்வருமாறுபேசினர்.

"சென்ற வருஷம் இதே காலத்தில் பகிஷ்காரம், அந்நிய நாட்டுத்துணிகளை எரித்தல் முதலிய ஆபாச திட்டங்களைக் கொண்ட ஒத்துழையாமையைப் பற்றி அதிகமாகக் கேள்விப்பட்டோம். இந்தக் கீழ்மைத்தனமான முயற்சிகளை அடக்க எடுத்துக் கொண்ட ஏற்பாடுகள் நல்ல பயன் பெற்று விட்டன. மேற் கூறப்பட்ட குழப்பங்களை உண்டாக்கினவர்கள் தங்கள் செய்கைகளுக்கு இரங்கித் தங்கள் கவனத்தை நல் வழியில் செலுத்திக் கொண்டிருக்கிறார்கள். நாட்டைப் புதுப்பிக்க வேண்டுமென்ற எண்ணமேயல்லாது அழிக்க வேண்டுமென்ற எண்ணம் அவர்களுக்கு இருக்கக்கூடாது!"

ஸ்ரீமான் அலெக்ஸாண்டரிடமிருந்து இதைவிட உயர்ந்த நற்சாட்சிப் பத்திரத்தை நாம் எதிர்பார்க்க முடியாது.

### ஒரு புத்திமதி

மேற் கூறப்பட்ட ஸ்ரீமான் அலெக்ஸாண்டர் சட்டசபை அங்கத்தினர்களுக்கு ஓர் அரிய புத்திமதி கூறுகிறர். எந்தெந்த தீர்மானங்கள் அரசாங்கத்தாரால் அங்கீகரிக்கப் படுமோ அந்தந்த தீர்மானங்களைக் கொண்டு வந்து நிறைவேற்றிக் கொண்டால் சட்டசபையின் காலம் வீணாகாதிருக்கும் என்று இவர் பகருகிறார். ஆகவே,இப்பொழுதுள்ள சட்டசபை அங்கத்தினர்கள் காலத்தை வீணாக்குகிறார்கள் என்பது இவர் அபிப்பிராயம் என்று நன்கு தெரிகிறது. வீணாக்கப்படும் இக்காலத்தை, சட்டசபை அங்கத்தினர்கள் வேறு உபயோகமான வழிகளில் செலவழித்தால் எவ்வளவு நன்மையிருக்கும்? ஆனால் இந்த விஷயத்தில் காலத்தைக் கழிப்பதில் தான்களும் சிறிது பங்கெடுத்துக் கொள்ள வேண்டுமென்று கனவரிற் சிலர் விரும்புவது தான் ஆச்சரியமாயிருக்கிறது.

## சென்னைத் தலைவர் நிலை

தேவகிபாலன் எழுதுகிறார் :—

சில வாரங்களாகச் "சுதேசமித்திரன்" சட்டசபைப் பிரவேசம் வேண்டுமென்கிற கட்சிக்குத்தலைமைவகித்து, அதைநிலைநாட்ட முயன்று வருகிறான். ஆனால் அதற்காகக் கையாளப்படும் முறைகள் திருப்திகரமாயில்லை. உடல்,பொருள்,ஆவி மூன்றையும்தியாகஞ்செய்வதில் சிறந்தோங்கா நிற்கும் தமிழ் நாட்டுத் தலைவர் ஸ்ரீ சேலம் சக்ரவர்த்தி இராஜகோபாலாச் சாரியார் அவர்களைத் தூஷணையாகவும், அவதூறாகவும், எழுதுவதே வழக்கமாயிருக்கிறது.

* * *

"காசியும் கள்ளுக்கடையும்" தான் இப்பொழுது மயக்கம் அதிகம் கொடுக்கிறது. எல்லாவற்றிற்கும் பொறாமை காரணமென நன்கு விளங்கும். சேலம் ஆச்சாரியாரைத் தூற்றுவதற்கென ஒருசிலர் தீட்சைவளர்த்துக் கொண்டு முன்வந்திருக்கின்றனர். ஸ்ரீ ஆச்சாரியாரைவிடத் தாம் பல நாட்கள் தேசசேவையில் ஈடுபட்டு உழைத்துவந்திருப்பதாய் ஒருவர் தற்புகழ்ச்சி கூறுகிறார். அதனாலேயே தம் தாடிகூட நரைத்துப்போய் விட்டதாம். பூர்வாஸ்ரமத்தின் நினைவுகூட கொஞ்சம் இவருக்கு வந்திருக்கவேண்டும். பள்ளிக்கூடத்தில் பிள்ளைகளை இலக்கணம் தவறாக அமைத்துக்கட்டுரைகள் எழுதியதற்காகக்கண்டனஞ் செய்து வந்ததுபோல, ஒரு உபாத்தியாயர் முறையிலே, "இவ்வுபமானம் தவறு" "இவனைத் தலைமையிலிருந்து நீக்கவேண்டும்" என்று கூறுகிறார்போலும்! விஸ்வாமித்திரர்போல் கர்ஜிக்கிறார்.

* * *

இவர்தான் தாஸுடன் கள்ளுக்கடைக்குப் போவது, ஸ்ரீ ஆச்சாரியாருடன் காசிக்குப் போவதைவிட மேலானதாகக் கருதுகிறார்! தாஸுடன் கள்ளுக்கடைக்குப் போவதற்கு, தாஸ் இவருடன் வருகிறாரோ என்னவோ? உள்ளூர் நண்பர்களுடன் தான் இவர் கள்ளுக்கடைக்குச் செல்லவேண்டும்.

* * *

'கதரில்' கூட நம்பிக்கை யில்லாதவர்களும், பொருளினாலாவது தேகத்தினாலாவது யாதொரு வித தியாகமுஞ் செய்யாதவர்களாலும் மகாத்மா காந்தியடிகளையும் அவர் முறைகளையும் இழித்துரைப்பவர்களாலும் இத்தகைய தேசப்பற்றில்லாத, தேசநன்மையைக் கருதாத-தேசத்தின் துன்பங்களை விடத் தம் சுயநலமே பெரிதென்று கருதுபவர்களினாலுமே நம்மியக்கம் சிதைவுறும் என அஞ்சுகிறேன். ஒத்துழையா இயக்கமானது, அதில் பூர்ண நம்பிக்கை கொண்ட ஓராயிரம் பேரினாலேயே வெற்றி முனைக்குச் செல்லக் கூடும். இப்போலிகள் இயக்கத்தைவிட்டு நீங்குதல் அதற்குப் பெரும்பலமாகும்.

* * *

இவ்விதப்போலி வேஷதாரிகளில் ஒரு பெண்பாலார் கலந்திருப்பது தான் விசனிக்கத்தக்கது. ஆயினும் தம் கட்சிக்கும் ஓர் பெண் சேர்ந்து, வலியளிப்பதாய்க் காட்டுவதற்காகவே இவரையும் சேர்த்துக்கொண்டிருக்கின்றனர் இக்கட்சியினர். இந்த அம்மை இனி என்ன திருவிளையாடல்கள் செய்வரோ தெரியவில்லை. ஆனால் தமிழ்நாட்டில் உள்ள சக்திகள் இவர் பெயர் கொண்டு எழுதப்பட்டுவரும் மொழிகளைக் கண்டு மயங்கிவிடமாட்டார்கள் என்பதை நான் நன்கறிவேன்.

* * *

காங்கிரஸின் அமைப்பை நாகபுரியில் மாற்றித் திருத்தியமைத்தபின், சில பட்டதாரிகளும், மற்றப்படிபொழுதுபோக்குக்காகக்காங்கிரஸில் சேர்ந்திருந்தவர்களும், முயல்கள் மருண்டு வளைக்குள் சென்று ஒளிவது போல் சென்று ஒளித்துக் கொண்டார்கள். இதில் சிலர் மகாத்மா காந்தி சிறைப்பட்ட பின் காங்கிரஸின் மூலம் பட்ட வேட்டையும், சட்டசபை வேட்டையும் ஆடலாமென மறுபடியும் வெளி வந்து எட்டிப் பார்க்கின்றனர். ஒருபதின்மர் கையொப்பமிட்டு ஓர் மகஜர் ஸ்ரீ தாஸருக்குத் தயார் செய்து அனுப்ப ஏற்பாடுகள் செய்து வருகிறார்கள். இதுவரையில் கையெழுத்திட் டிருக்கிறவர்களில் எவ்வளவு பேர், நான்கணா கொடுத்து காங்கிரஸின் கொள்கையை ஏற்றுக் கொண்ட காங்கிரஸ் வாதிகளோ தெரியவில்லை. நாகபுரி காங்கிரஸின் தீர்மானங்களைக் கண்டு ஓடிய "ராவ்சாயபுகளும்," இதில் கையெழுத்திட்டிருக்கின்றனர். தங்களுக்கு நிர்வாகக்கமிட்டியாரிடம் செல்வாக் கில் லா த தாலும், தங்கள் சொல்லைக் கேட்பவர்களில்லாததாலும், ஆனால் பெரும்பாலார் தங்கள் சார்பாக இருக்கின்றார்களென்பதை வேறு விதமாகத் தெரிவிக்கக் கூடாததாலும் இவ்விதம் மகஜர் எழுதியிருப்பதாகக் கூறியிருக்கிறார்கள். தமிழ்நாட்டில் இவர்களுக்கு எவ்வளவு செல்வாக்கு இருக்கிறதென்பதைத் தாங்களே பறை சாற்றிக்கொண்டதற்கு நாம் ஒருவாறு இவர்களுடைய கூரிய புத்தியை மெச்ச வேண்டும்.

* * *

"காங்கிரஸுக்குப் பிரதிநிதிகளுடன் வரவும்" என்று ஓர் பெரிய இடத்திலிருந்து தந்திகள் பறந்து வந்துகொண்டிருக்கின்றன, இது மூர்த்தி ஒருவர் கூறுகிறார். இத்துடன் பிரதிநிதிகள் அழைத்து வர ரூபாயும் வந்திருக்கிறதாம். உள்ளூரிலும் வரி போட்டு வாங்கியிருக்கிறார்களாம். இதன் உண்மை யெல்லாம் அடுத்த வாரம் நன்கு வெளிப்படும்,

## செய்தித் திரட்டு

சென்ற நவம்பர் 6-ந் தேதியில் பிரிட்டனில் வேலையில்லாத தொழிலாளர்களின் தொகை 13,66,800.

* * *

சர்தார் மேதாப் சிங்கின் வழக்கு திரும்பவும் இம்மாதம் பதினெட்டாந் தேதிக்கு ஒத்திப்போடப் பட்டிருக்கிறது.

* * *

தினந்தோறும் பஞ்சாப்பிய குருத்வாரங்கள் சிரோமணி குருத்வாரப் பிரபந்தக் கமிட்டியின் ஆட்சிக்கு வந்து கொண்டிருக்கின்றன.

* * *

பிரதிநிதிகளின் தேக சௌக்கியத்தை முன்னிட்டுப் பிரபலவைத்தியர் ஒருவரின் மேற்பார்வையில் காங்கிரஸ்ஆதரவில் ஒரு வைத்தியசாலை ஏற்படுத்தப் பட்டிருக்கிறது.

* * *

ஜமயத் - உல் - உலமாவின் வருடாந்த மகாநாடு கயையில் இம்மாதம் 24, 25, 26-ந் தேதிகளில் மௌலானா ஹபிப்-உல்-ரஹீமான் சாயப் அவைத் தலைமையில் நடைபெறும்.

* * *

சிம்லாவிலுள்ள கிராண்ட் ஹோட்டல் என்ற விடுதிச்சாலை தீக்கிரையாயிற்று. நஷ்டம் ஆறுலட்சரூபா. ஒருபகுதி இன்ஷ்யூர் செய்யப்பட் டிருப்பதாகவும் தெரிகிறது.

* * *

பீஹார் மாகாணக் காங்கிரஸ் கமிட்டியின் அக்கிராசனப் பதவியை ஸ்ரீமான் மஷ்ருல் ஹக், தேக அசௌக்கியம் காரணமாய் இராஜிநாமா செய்துவிட்டாரென்று தெரிகிறது.

* * *

ஜமயத்துல் உலமாசபையின் சிபார்சின் மேல் ஐம்பது உலமாக்கள் கட்டணம் ஒன்றுமின்றிக் காங்கிரஸுக்கு வரலாமென்று காங்கிரஸ் உபசாரணைக் கமிட்டியார் தீர்மானித்துள்ளார்.

* * *

18 வருட காலமாய்க் குருடாய்க் கிடந்த ஸ்ரீ டேனியல் பெத்கார் என்ற கிறிஸ்தவர் கோவாவிலுள்ள பிரான்ஸ் சேவியர் என்ற கிறிஸ்துவ ஞானியின் காலைத் தொட்டதனால் கண் பெற்றாராம்.

* * *

ஸ்ரீமான் எம்.என். ராய் என்பாரால் எழுதப்பட்ட "இந்திய விஷயங்களும் அவைகளைத் தக்க முடிவுக்குக் கொண்டு வருவதும்" என்ற பிரசுரம் இந்தியாவுக்கு வரக்கூடாதென்று தடுக்கப்பட்டிருக்கிறது.

* * *

சென்னை இராயப்பேட்டை ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்தஜன சபையின் ஞானந்த நிலையத்தில் டிசம்பர் 17-ந் தேதி ஞாயிற்றுக்கிழமை மாலை 3 மணிக்குத் திருவாளர் திரு. வி. உலகநாத முதலியார் அவர்களால் கண்ணப்ப நாயனார் சரிதம் பிரசங்கிக்கப்படும்.

* * *

மத்திய மாகாணத்தி லுள்ள சாகூர்னுமிடத்திய துணிவியாபாரிகள் தாங்கள் கொடுத்த வாக்குறுதிக்கு மாறாக நடந்து கொள்ளவே, உள்ளூர் காங்கிரஸ் கமிட்டி அங்கத்தினர்கள் அக்கடைகளுக்கருகில் மறியல்வேலைசெய்ய ஆரம்பித்துள்ளார்கள்.

* * *

சந்தபுரி கிலாபத் பிரசாரகரான மௌல்வி சாடட்ஹாசன் என்பாருக்கும் டாக்கா நகர கிலாபத் காரியதரிசி மௌல்வி ஷாம்ஷுல் வுடாவுக்கும் டாக்கா மாஜிஸ்ட்ரேட் இ.பி.கோ. 124-ஏ 153 - ஏ. பிரிவுகள்படி இரண்டுவருடக் கடுங்காவல் தண்டனை விதித்தார்.

* * *

நாடியாட்டிலுள்ள அந்நிய நாட்டுத் துணிக்கடைகளுக்கருகில் காங்கரஸ் தொண்டர்கள் மறியல் வேலை செய்ய ஆரம்பித்திருக்கிறார்கள்.ஒத்துழையாமைக்காகத் தம் ஜமீன்களைத் துறந்த ஸ்ரீமான் தேசாய் கோபால் தாஸும் மறியல்வேலையில் ஈடுபட்டுள்ளார்.

* * *

இராஜ நிந்தனையான உபந்யாசம் புரிந்ததாகக் குற்றஞ் சாட்டப் பட்டு விசாரிக்கப்பட்ட கல்கத்தா கிலாபத் கமிட்டி அங்கத்தினரான மௌல்வி சோராஜ் உதீன் என்பாருக்குக் கல்கத்தா பிரதமமாஜிஸ்ட்ரேட் பதினெட்டு மாதக் கடுங்காவல் தண்டனை விதித்தார்.

* * *

மலையாளத்தினின்று வெளியேற்றப்பட்ட மாப்பிள்ளைகளை அந்தமானில் பெண்டு பிள்ளைகளுடன் குடியேற்ற ஏற்பாடு செய்யப்பட் டிருக்கிறதாம். இதற்கான வேலைகளைச் செய்ய ஓர் உத்தியோகஸ்தரும் அந்தமானுக்கு அனுப்பப்பட் டிருக்கின்றனராம்.

ஆமதாபாத்தில் அமைக்கப் பட்டிருக்கும் கூர்ஜ்ஜா அரசியல் சங்கத்தின் காரியாலத்தைப் போலீஸார் பரிசோதனை போட்டு அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி அங்கத்தினரான ஸ்ரீ மூக்தம் என்பாரால் எழுதப் பட்ட ஹிமாத ஸ்ரீ கானி எனும் துண்டுப் பிரசுரத்தின் ஆயிரத்துக்கு மேலான பிரதிகளை எடுத்துச் சென்றார்கள்.

* * *

பம்பாயில் சிலமில்களில் கதர் துணிகள் உற்பத்தி செய்யப்படுகின்றன. மாதவிஜி தரம்ஸ்ஜி மில்லிலும் கதர்செய்ய ஆரம்பிக்கப்படவே, சுமார் 500 தொழிலாளர்கள் கதர் துணி செய்வது கஷ்டமென்றும் சம்பள உயர்வு கொடுக்கப் படவேண்டுமென்றும் மில் அதிகாரிகளைக் கேட்டார்கள். அன்னார் மறுத்துவிட்டனர். தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்துவிட்டார்கள்.

* * *

கர்னிடா நகரபரிபாலன சபையார் கடைக்காரர்கள் தங்கள் கடைகளுக் கருகில் வெயிலுக்காகப் போட்டுக் கொள்ளும் தட்டிகளுக்கும் இரும்புத் தகடுகளுக்கும் வரி விதித்தார். கடைக்காரர்கள், இவ்வரி நீக்கப்படும் வரை கடைகளைத் திறப்பதில்லையென் றுதீர்மானித்து அதன்படி கடைகளை மூடிவிட்டிருக்கிறார்கள் என்று 'ஹிந்து' பத்திரிகையில் ஒருநிருபர் தெரிவிக்கிறார்.

* * *

காங்கிரஸ் முகாமுக்கு மூன்றரை மைல் தூரத்திலுள்ள ஓர் இடத்தில் போலீஸ் முகாம் அமைக்கப்படுமென்றும் நகரத்தில் நூற்றிருபது ரிசர்வ் போலீஸார் வைக்கப் பட்டிருப்ப ரென்றும் அவசரம் ஏற்பட்டால் ஒழிய அவர்கள் உதவி நாடப்படமாட்டாதென்றும் நகரப்பாது காப்பு வேலைகளைக் கயைப் போலீஸ் செய்து வருமென்றும் பீஹார் ஒரிஸா மாகாண அரசாங்க அங்கத்தினரான ஸ்ரீமான் மெக்பர்சன் ஒரு நிருபரிடம் கூறினர்.

* * *

அமெரிக்க ஜனாதிபதியான ஸ்ரீமான் ஹார்டிங், காங்கிரஸ் சபையில் செய்த அக்கிராசனப் பிரசங்கத்தில் மதுவிலக்குச் சட்டத்தைப் பற்றிக் கவனிப்பதற்காகச் சமீபத்தில் அந்தந்த இராஜ்யங்களைச் சேர்ந்த கவர்னர்களின் மகா நாடு ஒன்று நடை பெறும் என்றும் இன்னும் மதுவிலக்குச் சட்டத்தை ரத்துசெய்வது கூடாததாகு மென்றும் பொது ஜனங்கள் விரும்பினால் அச்சட்டத்தில் மாறுதல்களை ஏற்படுத்தலா மென்றும் கூறினர்.

* * *

தங்கள்கீழ் வேலைசெய்யும் கீழ்தர உத்தியோகஸ்தர்களுக்குக் கராச்சி நகர பரிபாலன சபையார் கதரால் ஆகிய ஆடைகளைக் கொடுக்கத் தீர்மானித்துள்ளார். இன்னும் நகரத்திற்குள்ளிருக்கும் மதுபானக் கடைகளை எடுத்துவிடவேண்டுமென்ற அரசாங்கத்தாருக்குச் சிபார்சு செய்வதென்றும் தீர்மானித்தார்கள். ஒரு கமிஷனர் நகரபரிபாலனசபைப் பள்ளிக்கூடங்களில் கைராட்டின நெசவுத்தொழில் கற்பிக்கப்படவேண்டு மென்று பிரேரணை செய்தார்.

* * *

கல்கத்தாவைச் சேர்ந்த விக்லூக் என்ற இடத்திலிருக்கும் தொழிற் சாலையைச் சேர்ந்த சீனக்காரர்களுக்கும் இந்தியத் தொழிலாளர்களுக்கும் சென்ற 8-ந் தேதியில் சச்சரவு ஏற்பட்டது. இவர்களுக்குச் சில காலமாக மனத்தாங்கல் ஏற்பட்டிருந்தது. சென்ற வெள்ளிக்கிழமை தொழிலாளர் ரெயில் வண்டியில், எம்மாதிரி உட்காருவது என்ற விஷயமாக இருதிறத்தாருக்கும் பேச்சுவார்த்தை ஏற்பட்டு இறுதியில் அடிதடி உண்டாயிற்று. சீனக்காரர்கள் தோற்றுப் போய் ரெயில்வே பள்ளிக்கூடத்தில் சரண் புகுந்தார்கள். இதனால் ரெயில்வே பள்ளிக்கூடம் நாசமாக்கப் பட்டதல்லாமல் ஆறு சைனக்காரர்கள்-இவர்களில் இருவர் பலமாகவும்-காயமடைந்தார்கள். இரண்டு இந்தியர்களுக்கும் காயம் ஏற்பட்டது.

* * *

ராய்பூரைச் சேர்ந்த ரஜ்னன்தியாகன் மில்லைச் சேர்ந்த தொழிலாளர்கள் சின்னாட் களுக்கு முன் சம்பள உயர்வு சம்பந்தமாக வேலை நிறுத்தம் செய்தார்கள். வேலைநிறுத்தத்திற்குக் காரணர்களாயிருந்த பதின்மூன்று பேர் இ. பு. கோ. 107-வது பிரிவுபடி குற்றஞ்சாட்டப் பட்டு ஜாமீனில் விடப் பட்டிருக்கிறார். சென்ற 9-ந் தேதி இராணுவப் போலீஸும் இவ்விடத்திற்குவந்தது. மில் சங்கக்காரியதரிசி தொழிலாளர்கள் பால்தியோபாக் என்ற இடத்தில் கூட்டங்கூடி யிருந்தார்களென்றும் அவர்கள் மீது துப்பாக்கிப் பிரயோகஞ் செய்யப்பட்ட தென்றும் அதன் பயனாய் ஒருவர் இறந்தும் பதின்மூன்றுபேர் காயமடைந்தும் போய்விட்டார்களென்றுங்கூறுகிறார். 9-ந் தேதியில் வேலைநிறுத்தம் கொண்டாடப் பட்டது.

ஜனங்கள் கவர்னருக்குத் தர்கிகொடு[த்]திருக்கிறார்கள்.

* * *

அலகாபாத்தைச் சேர்ந்த ஸ்ரீமா[ன்] காசிபூரா என்பார் தாம் பண்டித மோ[தி]லால் நேருவின் வீட்டிற்குத் தருக்கி[யர்]களின் வெற்றி சம்பந்தமாய் நடைபெ[ற்ற] கொண்டாட்டங்களைப்பற்றி விசாரிக்க[ச்] சென்றிருந்ததாகவும் அப்போது பண்[டி]தர் தம்மைப்பார்த்து "நீர் அரசாங்கத்தி[ன்] ஒற்றர்; ஆகவே உமக்கும் நமக்கும் ஒருவி[த] சம்பந்தமுமில்லை." யென்று சொன்ன[தா]கவும், தாம் அரசாங்க ஒற்றராய் இல்லா[தி]ருந்தும் பண்டிதர் ஜனங்களுக்கெதிரி[ல்] அங்ஙனம்சொன்னது அகௌரவம் வி[ளை]வித்ததாகுமென்று மான நஷ்டவழக்[கு] ஜில்லா மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் தொ[டு]த்திருந்தார்.

விசாரணை செய்த ஜில்லாமாஜிஸ்[ட்]ரேட் வழக்கைத் தள்ளிவிட்டதல்லாம[ல்] அரசியற்காரர்கள் ஒருவரையொருவர் [நி]தையான பெயரிட்டு அழைப்பது வழக்[க]மென்றும், இம்மாதிரி நடைபெறுவதை[க்] கவனிப்பது கிரிமனல் கோர்ட்டுகளி[ன்] வேலை அல்லவென்றும் பண்டிதர், அ[ர]சாங்க ஒற்றர் என்றதனால் வாதிக்கு ஒ[ரு] வித பாதகமும் உண்டாய் விடவில்[லை] யென்றுங் கூறினர்.

* * *

ஸ்ரீமதி பார்வதி அம்மாள் என்ற ப[தி]னேழு வயதான இந்து விதவைக்கும் ஸ்ரீ[மான்] எம்.வி. ரமணராவ் என்ற பீ.ஏ. வ[கு]ப்பு மாணவனுக்கும் முதல் தேதியி[ல்] இராஜமகேந்திர புரத்தில் விவாகம் நடை[]பெற்றது.

### ஏழைப் பள்ளிக்கூடச்சங்க இரவு பாடசாலை

ஆயிரம் விளக்கு

1922-ம் வருஷம் டிசம்பர் மாதம் 17[-ந்] தேதி ஞாயிற்றுக்கிழமை காலை 8 மணிக்[கு] ஆயிரம் விளக்குக் கார்பரேஷன் மாட[ல்] ஸ்கூல் கட்டடத்தில் 'சுதேசமித்திரன்' உத[வி] ஆசிரியர் ஸ்ரீமான் உலகநாத நாயகர் "நா[ம்] முன்னேற்றம் அடையும் வழி" என்பதை[ப்] பற்றி ஏழைப் பள்ளிக்கூடச் சங்கக் கௌர[வ] காரியதரிசி ஸ்ரீ. தி. வரதாச்சாரியார் அவை[த்] தலைமையில் ஓர் உபந்நியாஸம் புரிவார்.





### [மகா]த்மாகாந்தி கைங்கர்ய நிதி

தூத்துக்குடி

[]சங்கக் காரியதரிசி தெரிவிப்பது.

[ம]காத்மாகாந்தி கைங்கர்ய நிதிசங்கம் []பர் மாதம் வரவு செலவு கணக்கு []ம்.

| வரவு. | ரூ. | அ. | ப. |
|---|---|---|---|
| [] கணக்குப்படி | 32 | 8 | 8 |
| []ா வசூல் | 18 | 4 | 0 |
| []டி வசூல் | 58 | 0 | 11 |
| []கொடை | 2 | 8 | 0 |
| ஆக ரூபா | 111—5—7. | | |

செலவு விபரம்.

| | | | |
|---|---|---|---|
| []11-22 தினச்செலவு | 5 | 0 | 0 |
| []டுப்பிரசுரம் வெளியீடு 2. | 8 | 8 | 0 |
| []யன்தர் சம்பளம் | 10 | 0 | 0 |
| []லரைச் செலவு | 2 | 2 | 0 |
| []டியல் கடை ச. நா. வசம் | 85 | 0 | 0 |
| []யதரிசி வசம் | 0 | 11 | 7 |
| ஆக ரூபா | 111—5—7. | | |

### []ஆரணியில் இராஜீயப் பிரசங்கம்

[]ஆ. அருணகிரி செட்டியார் அறிவிப்பது

[ஸ்ரீ]மான் என். மூர்த்திநேற்று இவ்விடம் []ங்கம் செய்தார், உபந்யாசம் செய்து []கார்த்தவுடன் அக்கிராசனம் வகித்த []ான் ஸ்ரீவஸ்யம் அய்யங்கார் கைகளை []டிப்பிரசங்கம் செய்துகொண்டிருக்கை அவ்விடத்தில் உட்கார்ந்துகொண் []ந்த ஒரு போலீஸ் ஹெட்கான்ஸ்டே[பிள்] (டிரஸ் இல்லாமல்) அக்கிராசனரைப் []த்து உடனே யெழுந்து "உம்முடைய []சங்கத்தை நிறுத்துகிறீரா? இல்லையா? []மைப் பிராசிகூஷன் செய்கிறேன்" []றுசொன்னார். அக்கிராசனர் எந்தச்சட்[டத்]தின்கீழ் என்னைப் பிராசிகூஷன் செய் []என்று பொறுமையாகச்சொல்லிவிட்டு []ற் கொண்டும் பேசிக்கொண்டிருந்தார். []னே ஜில்லா காரியதரிசி ஸ்ரீ வி. என். []ங்கசாமி ஐயங்கார் எழுந்து இம்மாதிரி []ாலீஸ் ஹெட்கான்ஸ்டேபில் உபந்யா[ச]ரைத்தடுப்பது சட்டவிரோதமென்றும் []ர் பேரில் குற்றமிருந்தால் சட்டப்படி []வடிக்கை யெடுத்துக்கொள்ள வேண்டு[]யொழிய வீண் ஆர்ப்பாட்டம் செய்வது []கென்றும் கண்டித்தார். டவுன் சப் [இன்]ஸ்பெக்டர் ஒரு மூலையில் உட்கார்ந்து []ாண்டு கேட்டுக் கொண்டிருந்தார். []தைப் பற்றி நாம் ஒன்று சொல்லவேண் []டியதில்லை.

### திண்டுக்கல்

ஸ்ரீமான் யாகூப் அலி தெரிவிப்பது

[]8-12-22உ புதிய கலிபாதினம்இந்நகரில் []ப்பாகக் கொண்டாடப்பட்டது. []லை 5-மணிக்கு பேகம்பூர் மஜீதிலிருந்து []ந்தாக்கொடி கிலாபத்கொடி இவைக[ளை]ப் பிடித்துக்கொண்டு ஊர்வலம் புறப் []ட்டு நகரின் முக்கிய பிரதான வீதிகள் []ழியே தேசிய கீதங்களும் அபிது []க்காரும் பாடிக்கொண்டு வந்து இரவு []மணிக்கு ஊர்வலம் முடிவடைந்து []பகம்பூர் மஜீதுக்கு முன்பாகக் கூடிய []ட்டத்தில் முதலில் வடக்கு மதுரை []ல்லா காங்கிரஸ் தலைவர் ஸ்ரீமான் அ. []கிருஷ்ணசாமி அய்யங்கார் அவர்கள் []ருக்கியரின் வெற்றியைப் பற்றியும் []திய கலீபாவின் விசேடத்தைப்பற்றி[யு]ம் அதில் இந்திய முஸ்லிம்கள் செய்ய []ண்டிய கடமையைப்பற்றியும் சுமார் []மணி நேரம் பிரசங்கம் செய்தனர். []ன்பு ஜனப், யாகூப் அலி அவர்களால் []ருக்கியின் வெற்றியும், முடானியா ஒப் []தமும், இப்பொழுது நடைபெறும் []சேன் மகாநாட்டில் பிரிட்டிஷார் []ந்துகொள்ளும் தோரணையும் []த்துச்சொல்லப்பட்டன. உலமா ஒருவ[]ல் புதிய கலீபாவிற்கு வாழ்த்து (துஆ) []க்கப்பட்டு இரவு10-மணிக்குக் கூட்டம் []ினிது கலைந்தது.



### வாலாஜாபாத்தில் கைராட்டினம்

இவ்வூரில் கால் இராத்தல் பஞ்சு சிரமத்துடன் நான்கு நாட்களில் நூற்கின்றனர். இதைப்பற்றித் தீர்க்கவிசாரித்ததில் இராட்டினத்திலேயேமாறுதலுண்டென்று தெரியவந்தது. ஆதலால், தென் ஆற்காடு முதலிய ஏனைய ஜில்லாவாசிகளில் எவரேனும் எவ்வளவு அதிகமாக நூற்கிறார்கள் என்றும், குறைந்தது அரை இராத்தல் (பவுண்டு) நூற்கவாவது முடியுமா வென்றும், அப்படி நூற்பவர்கள் இருக்கும் கிராமம், அவர்கள் பெயர், அவர்களைக் காண வேண்டி எந்தஸ்டேஷனில் இறங்கி எந்த வழியாக வரவேண்டும் என்பது முதலிய விபரங்களையும்கீழ்க்கண்ட விலாசத்திற்குத் தயைகூர்ந்து கடிதமூலமாய்த் தெரிவிக்குமாறு பணிவுடன் பிரார்த்திக்கின்றனன்.

க. சீதாபதி,
பிரசாரக கார்யதரிசி,
காங்கரஸ் கமிட்டி, வாலாஜாபாத்.

### காங்கிரஸ் தலைவர் கவனிக்க

ஸ்ரீமான் சி. ஆர். தாஸ் அவர்கள் கள்ளுக்கடை, சாராயக்கடை அந்நியநாட்டுத் துணிக் கடைகளை மறியல்செய்யப் போதுமானதொண்டர்கள் வந்தால் மறியல் வேலையைத் தாம் முதன்மையாக நின்று செய்வதாக எழுதி இருக்கிறதைப் பார்க்கப்பார்க்க என்மனம் உருகுகிறது. தென்னாட்டிலுள்ள தலைவர்கள்இங்ஙனம் செய்ய முன்வருவார்களா?

பி. லட்சுமணன்.

## புதிய நாவல்கள்

### சந்திரசேகர ஜடாவல்லவர்

இந்நூல் மாணவர்களின் உபயோகத்திற்காக மட்டும் பதிப்பித்த சுருக்கமான (Abridged edition) பதிப்புஅல்ல. இது முதல் முதலில் ஸ்ரீமான் சுப்பிரமண்ய பாரதியாரால் எழுதி மூன்று பாகமாக வெளியிடப்பட்டது; படித்தவர்கள் இதன் சுவையை அறிந்து கொண்டாடிய பெரிய (Original edition) பதிப்பு. இப்பதிப்பு வெகுநாளாய் அச்சிலில்லாமலிருந்ததால் சிறிய பதிப்பையே எல்லோரும் வாங்கிவந்தார்கள். இப்பொழுது நாவல் படிப்போரின் விருப்பத்துக்கிணங்கி இப்பெரிய பதிப்பையே சுமார் 600 பக்கங்களடங்கிய ஒரே புத்தகமாக வெளியிட்டிருக்கிறோம். இந்த சமயம் இந்நாவலை வாங்கிப் படிக்கத் தவறாதீர்கள். இதில் வரதக்ஷிணையால் வருங்கேடு, கல்வி, பக்தி, நன்றிமறவாமை, பொறாமை முதலிய அரிய விஷயங்களும் ஸ்திரீ, புருஷர்கள், எஜமானன், வேலைக்காரன் முதலிய அனைவரும் அனுஷ்டிக்க வேண்டி ஒழுக்கம்முதலிய அநேகவிஷயங்களும் நன்கு விளக்கப்பட் டிருக்கின்றன. இந்நாவலைப் படிப்போருக்கு நவ நாகரிகத்தின் மயக்கம் தோன்றாது என்பது திண்ணம். இதன் விலை ரூபா 2—8

### சித்திரரேகை

அல்லது

அசோகவன அற்புதம்

நாகை - கோபாலகிருஷ்ண பிள்ளை எழுதியது. ரூபா 1—8—0

### சுந்தர்சிங்

அல்லது

பாஸ்கர விலாஸ் படுகொலை

ஆரணி - குப்புசாமி முதலியார் எழுதியது. ரூபா 1—8—0

### ஆனந்த மனோகரன்

அல்லது

உலகத்தின் இரகசியங்கள்

ரூபா 1—0—0

நவசக்தி புத்தகசாலை,
இராயப் பேட்டை, சென்னை.

### 25-ரூபா இனும்

மண்ணெண்ணெய் விளக்கால் நம்மவர்களுக்கு ஏற்பட்டுவரும் எண்ணிறந்த தீமைகளைப் பற்றியும், மற்ற எண்ணெய் விளக்குகளால் ஏற்படும் நன்மைகளைப் பற்றியும் தமிழில் சிறந்த வியாசம் எழுதுவோருக்கு 25 ரூபா இனும் அளிக்கப்படும். வியாசங்கள் சுருக்கமாகவும் விளக்கமாகவும் இருக்கவேண்டும்.

பத்திராதிபர்,
"லோகோபகாரி," சென்னை.

### மூன்றாம் வகுப்புப் பிரயாணிகள்

குறை நீங்கும்வழி

மூன்றாம் வகுப்பில் ஆங்கிலோ இந்தியர்களுக்கும் ஐரோப்பியர் களுக்கும் வண்டிகளைப் பிரத்தியேகப் படுத்திவைக்கும் வழக்கத்தை நிறுத்திவிட வேண்டுமென்றும் பிரயாணிகள்சாமான்கள் ஆகிய இவ்விரண்டையும் ஏற்றிச்செல்லும் வண்டித் தொடர் முழுமையிலும் பிரயாணி வண்டிகளாகச் செய்து, சாமான் வண்டிகளுக்குப் பதிலாக பிரயாணி வண்டிகளை அவைகளுடன் இணைக்கவேண்டு மென்றும், பிரயாணிகளை ஏற்றிச்செல்லும் வண்டித் தொடரில் போகக்கூடாமல் போய்விட்டவர்கள் சாமான் வண்டியுடன் செல்வதற்காக அதனுடன் ஒன்றிரண்டு பிரயாணி வண்டிகளை இணைக்கவேண்டுமென்றும், இம்மாதிரியான முறை கையாளப்படின் மூன்றாம்வகுப்பு ரெயில்வேபிரயாணிகளின் கஷ்டங்கள் ஒழியுமென்றும் ஒரு நிருபர் சுதேசப் பத்திரிகை யொன்றில் குறிப்பிடுகின்றார்.

### விருதுபட்டி

காங்கிரஸ் காரியதரிசி எழுதுவது

5-12-22 மாலை 7-மணிக்குக் கோட்டைப் பட்டிசாவடி முன் ஸ்ரீமான் இராஜமய்யர் அக்கிராசனத்தின் கீழ் ஸ்ரீமான் இலக்ஷ்மணன் சேலம் ஸ்ரீமான் சக்கரவர்த்திஇராஜகோபால ஆச்சாரியார் அனுப்பியகோட்டீஸிகளைக் கூட்டத்தில் படித்துக் காட்டி சட்டசபைக்குப்போகிறவர்களுக்கு ஓட்டுக் கொடுக்கப்படாதென்று சொல்லிய பின் ஸ்ரீமான் ஆண்டியப்பரவர்கள் காங்கிரசில் சேர வேண்டியதைப் பற்றி வெகு உருக்கமாய்ப் பேசினர். பின்னால் ஸ்ரீமான் இலக்ஷ்மண பிள்ளை தீண்டாமையைப் பற்றியும் சட்டசபை பகிஷ்காரத்தைப் பற்றியும் சொல்லி எல்லோரும் காங்கிரசில் அங்கத்தினராய்ச் சேர்ந்து வெகு தீவிரமாய் வேலை செய்ய வேண்டுமென்றும் இந்தச் சமயத்தில் நம் அடிமைத்தனத்தை நீக்கிக் கொள்ளாவிட்டால் நாம் இந்தியர்களல்ல வென்றும் கதர் கட்ட வேண்டுமென்றும் தீவிரமாய்ப் பேசினர். ஸ்ரீசண்முகானந்த சுவாமிகள் மதுவிலக்கைப்பற்றிப் பேசினர்கள்.

## சட்டசபைப் பிரவேசம்

### பயனற்றது

மாடர்ன் ரெவ்யூ பத்திரிகையில் ஆசிரியர் குறிப்புகளின் கீழ்ப் பின் வரும் விஷயம் காணப்படுகிறது:—

அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியார் விவாதம் செய்யாமல் ஒத்துழையாக் காரர்கள் சட்ட சபைகட்குச் செல்வதா கூடாதா என்ற விஷயத்தைக் கயைமகா நாட்டில் முடிவு செய்ய ஆரம்பத்திலேயே விட்டுவிட்டிருக்கலாம். அவ்விஷயமாகக் கமிட்டியார் தீர்மானஞ் செய்திருந்தாலும் அத்தீர்மானம்முடிவானதாகமாட்டாது.

கமிட்டியார் தாங்கள் நிறைவேற்றிய தீர்மானங்களைப்பற்றியும் தள்ளிவிட்ட தீர்மானங்களைப்பற்றியும் கயை காங்கிரஸில் கவனிப்பதற்காக ஒத்திப்போட்டிருக்கும் தீர்மானங்களைப்பற்றியும் ஓர் அறிக்கையை வெளியிட்டிருந்தால் பொது ஜனங்களுக்கு அதனால் நன்மை ஏற்பட்டிருக்கும். கீழ்வருந் தீர்மானம் நிறைவேற்றப்பட்டதாகத் தெரிகிறது. அத்தீர்மானம் வருமாறு:—

"சட்டமறுப்பு விசாரணைக் கமிட்டியாரின் அறிக்கையை இக்கமிட்டியார் அங்கீகரிப்பதல்லாமல் பொதுப்பட சட்டமறுப்பு இயக்கத்தை ஆரம்பிப்பதற்குத் தேசம் தயராய் இல்லையென்றும் இக்கமிட்டியார் சென்ற 1921-ம் வருஷம் நவம்பர் 4-ந் தேதியில் தில்லியில் நிறைவேற்றிய இரண்டாந் தீர்மானத்திற்கு ஒத்தராய் தேசத்தின் ஒரு பாகம் பொதுப்பட சட்டமறுப்பு இயக்கத்தை ஆரம்பிப்பதற்குச் சித்தமாய் இருக்குமானால் தங்கள் சொந்தப் பொறுப்பின் மேல் மாகாணக் காங்கிரஸ் கமிட்டிகள் சில நிபந்தனைகள் மீது சட்டமறுப்பை ஆரம்பிக்க உத்தரவு கொடுக்கலாமென்றும் தீர்மானிக்கின்றனர்.

எவ்விதமான சட்டமறுப்பையும் ஆரம்பிக்கத் தீர்மானிப்பதன் சம்பந்தமாய் மாகாணக்கமிட்டிகளுக்குள்ள அதிகாரமும் கொடுப்பதாகச் சென்ற நவம்பர் 4-ந் தேதியில் இக்கமிட்டியார் நிறைவேற்றிய இரண்டாவது தீர்மானத்தை அநுஷ்டானத்துக்குக்கொண்டு வந்து விடுகிறதென்றும் பிப்ரவரி 24-ந் தேதியில் செய்த தீர்மானம் எங்கெங்கு அதற்கு இடையூறயிருக்கிறதோ அந்தப் பாகங்களை ரத்து செய்வதென்றும் இக்கமிட்டியார் தீர்மானிக்கின்றனர்."

இவ்விஷயமாகக் கமிட்டியார் செய்த தீர்மானம் முறையானதென்றே பொதுவாகக் கூறலாம்.

சட்டசபைக்குச் செல்லவேண்டு மென்ற விஷயமாக இருதிறத்தார்சொல்வதற்கு அதிகமாக ஒன்றுஞ் சொல்வதற்கில்லை. சட்டசபைகட்குள்ளும் சட்டசபை மூலமாயும் சிறிது நன்மை செய்யக்கூடுமென்று கருதினலும் அதற்காகச் செலவழிக்கப்படும் பணம் காலம் இவைகளை நோக்குழி அந்நன்மை பெரிதாகத் தோற்றப்படவில்லை. ஒத்துழையாக்காரர்கள், ஒத்துழையாக்காரர்கள் என்ற முறையில் சட்டசபைகளுக்குச் செல்லக்கூடாதென்று நாம் அபிப்பிராயப்படுகிறேம். ஏனெனில் அவர்கள் சட்டசபைகளின் நடவடிக்கைகளுக்குக் குந்தகம் விளைவிப்பவர்களாகவும், சட்டசபைகளை உடைப்பவர்களாயும் போகமுடியும் என்பதனுலேயாம். சட்டசபை மூலமாய்ச் சிறிது நன்மை செய்யலாம் என்று முன்னமே கூறியிருக்கிறேமாகையால் சட்டசபைகளில் கொண்டுவரப்படும் எல்லாமசோதாக்களையும் தீர்மானங்களையும் எதிர்ப்பதனுல் என்ன நியாயம் இருக்கிறதென்பதை நாம் உணரக்கூடவில்லை. சட்டசபைகள்மூலமாய்அரசாங்கத்தார் என்னசெய்கிறர்களோ அல்லது செய்ய உத்தேசித்திருக்கிறர்களோ அவைகளை யெல்லாம் ஒத்துழையாக்கட்சியினர் செய்வதாயிருந்தால் அவர்கள்சட்டசபைகளில் கொண்டுவரப்படும் எல்லாவற்றையும் எதிர்ப்பதில் நியாயம் இருக்கின்றது. சட்டசபைகளை உடைத்தெறிவதற்காக நாம் காலத்தையும் பலத்தையும் செலவழிப்பது பிரயோஜனமற்றது. இதைக் காட்டிலும் மேலானதாயும் அவசரமானதுமான வேலைகளை ஒவ்வொருவரும் செய்ய வேண்டியவர்களாயிருக்கிறர்கள். அமிதவாதிக் கட்சியினர் தங்கள் நோக்கத்தை வெளிப்படுத்தாதிருந்து சட்டசபைகளுக்கு அங்கத்தினர்களாய் நின்று இருந்தால் அவர்கள் பெரும்பாலான ஸ்தானங்களைக் கைப்பற்றியிருக்கக் கூடும். இப்போது அரசாங்கத்தார், நிலச்சுவான்தார்கள், மிதவாதிகள் ஆகிய இவர்கள் விழித்துக் கொண்டிருக்கிறர்கள். ஆகவே ஒத்துழையாக்காரர்கள் சட்டசபைகளின் நடவடிக்கைகளுக்குக் குந்தகம் விளைவிப்பதற்கும் சட்ட சபைகளை உடைப்பதற்கும் போதுமான ஸ்தானங்களைப் பெற முடியாது. சட்டசபைகளின் நடவடிக்கைகளுக்குக் குந்தகம் விளைவிப்பதும் அவைகளை உடைத்தெறிவதும் கூடுமான காரியம் என்று வைத்துக் கொள்வோம் இதனுல் இன்னுமதிகமான தன்னரசாட்சியும் கொடுங்கோன்மையும் ஏற்படாமல் சுயராஜ்யம் வருமென்று நம்ப என்ன நிச்சயம் இருக்கிறது? சில தொகுதிகளில் ஒத்துழையா அபேட்சகர்கள் தோற்றுவிட்டால் ஒத்துழையாக்காரர்கள் தாங்கள் பறைசாற்றியபடி ஜனப்பிரதிநிதிகள் அல்லவென்னும் அபவாதச் சொல் ஏற்படும். இதுவல்லாமல் தாங்கள் சட்டசபைக்குச் சென்று அங்கு நடைபெறுவனவற்றிற்குக் குந்தகம் விளைவிப்பதற்குப் பதிலாகத் தாங்களாகவே தோற்றுப்போய் விட்டவர்களாவார்கள்.

நிர்மாண வேலைத்திட்டத்தினுல்சுயராஜ்யம் வந்து விடாதென்றும் அது நேராகச் சுயராஜ்ய பாதைக்குக் கொண்டு போய்ச் சேர்க்காதென்றும் கூறியிருக்கிறேம். சுயராஜ்யம் அடைவதற்காக ஜனங்கள் பலாத்காரமற்ற வழிகளில் முயற்சிசெய்ய ஜனங்களுக்கு அஃது ஊக்கமளிக்குமென்றும் கூறியிருக்கிறேம். ஒத்துழையாதார்களின் கொள்கையை அறிந்தமட்டில் அவர்களுக்குத் தகுந்த இடம் சட்டசபை ஆக மாட்டாதென்று அபிப்பிராயப் படுகிறேம். அவர்கள் சட்டசபைகளுக்குவெளியிலிருந்தே காரியங்களைச் செய்ய வேண்டும்.

ஒத்துழையாதாரின் நிர்மாண வேலைத் திட்டத்தில் தேச விருத்திக்கான வேலைகளும் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. அவ்வேலைகள் மகா கஷ்டமானவை. அவைகளில் ஒன்று தீண்டாமையை ஒழிப்பதாகும். திட்டத்தில் தீண்டாமையை ஒழிப்பதேமுதன்மையாகுமென்று மகாத்மா குறிப்பிட்டுள்ளார். தீண்டாமையை ஒழிப்பதற்கு மனமாறுபாடு இன்றியமையாததாய் இருக்கிறது. மத சம்பந்தமான சீர்திருத்தமே இதை நிறைவேற்றவல்லது. ஜாதி உணர்ச்சி இருக்கும் வரையிலும் தீண்டாமையை ஒழிப்பது கூடாத காரியமாகும். தீண்டாமை என்பது இந்தியாவுக்கு மாத்திரம் பிரத்தியேகமானதாக மாட்டாது. அமெரிக்காவிலும் நீக்ரோவர்களை இம்சிக்கும் வழக்கம் இருந்து வருகிறது. இவ்விடத்தில் தீண்டாமை மதத்துடன் கலக்கப்பட்டிருப்பதால் அதை ஒழிப்பது சிறிது கஷ்டந்தான். தீண்டாமையை ஒழிக்கும் விஷயத்தில் ஒத்துழையாக்காரர்கள் ஆண்மைத் தனத்துடன் நடந்து கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் அதற்கும் தங்களுக்கும் ஒருவித சம்பந்தமும் இல்லையென்று கூறிவிடவேண்டும். வெறும் பேச்சாலும் தீண்டாமையை ஒழிக்க வேண்டுமென்ற உண்மையான எண்ணத்தாலும் தீண்டாமை ஒழியாது.

நிர்மாணவேலைத்திட்டத்தைச்சரிவரநடத்துவதற்கு ஊக்கமாகக் காரியங்களை நடத்தக் கூடிய தலைவர்கள் வேண்டும். சட்டசபைகளுக்குச் செல்வதனுல் வெளியிலிருந்து நிர்மாண வேலை செய்வதற்குக்குந்தகம் ஏற்பட்டுவிடும்.

தேசத்திற்காகப் பாடு பட்டவர்களைப் பற்றி அவதூறு சொல்லக் கூடாது. சட்டசபை மூலமாய் தேசத்திற்கு நன்மை செய்யப்பிரியப்படுவோர்கள் அதே மாதிரி செய்ய விட்டு விடப்படவேண்டும்.

## பிரதம மந்திரிகளின் முடிவு

1733-ம் வருடத்தில் பிரசுரிக்கப்பட்ட கிரேட் பிரிட்டன் பிரதம மந்திரிகளின் சரித்திரச் சுருக்கம் 'என்ற புத்தகத்தில்' பிரதம மந்திரிகளின் முடிவு என்னுயிற்றென்பதைக்காணின், தம்முடைய இராஜீநாமாவைப்பற்றிய வருத்தம் ஸ்ரீமான் லாயிட் ஜார்ஜுக்குக் குறையும். அப்புத்தகத்தில் சில பிரதம மந்திரிகள் எத்தகைய முடிவை அடைந்தார்கள் என்பதைப்பற்றி ஓர் அட்டவணை குறிப்பிடப்பட்டிருக்கிறது. அது வருமாறு:—

தூக்கி விடப்பட்டவர்கள் 3.

கோடரியால் மாண்டவர்கள் 10.

வேலைசெய்யத் திறமையுள்ள பிச்சைக்காரர்களால் மாண்டவர்கள் 3.

ஊர்பேர் தெரியாதவர்களால் கொல்லப்பட்டவர்கள் 2.

சிறையில் மாண்டவர்கள் 4.

நாடு கடத்தப்பட்டு மாண்டவர்கள் 4.

தாங்கள் செய்த குற்றத்தை உணர்ந்து அதன்பயனுய் மாண்டவர்கள் 1.

தன் எஜமானனைத் தியாகஞ்செய்து தப்பியவர் 1.

இத்தகைய பயங்கர அட்டவணையால் தற்கால இராஜதந்திரிகள் பெருத்த உத்தியோகங்களை ஏற்றுக் கொள்ளாமல் இருப்பார்கள் என்ற காரணத்திற்காக, மேற்கூறியவர்கள் தற்கால அர்த்தப்படி பிரதம மந்திரிகள் ஆகமாட்டார்களென்றும் அவர்கள் அரசருக்குப் பிரியமானவர்களாயிருந்தார்களென்றும்,அவர்களில்சிலர்பியர்ஸ்காவஸ்டன், மார்டிமார் போன்றவர்களாவார்களென்றும் 'மான் செஸ்டர்கார்டியன்' பத்திரிகையில் ஒரு நிருபர் குறிப்பிட்டுள்ளார். (சுயராஜ்யா)



Printed and Published by T. V. Kalyanasundara Mudaliar, (Editor) at the Sadhu Press, 44-Bazaar Road, Royapettah, Madras.

